

அஞ்சிலே ஒன்று பெற்றான்
அஞ்சிலே ஒன்றைத் தாவி
அஞ்சிலே ஒன்று ஆறு ஆக
ஆரியற்காக ஏகி
அஞ்சிலே ஒன்று பெற்ற
அணங்குகண்டு அயலாா ஊரில்
அஞ்சிலே ஒனறு வைத்தான
அவன் எம்மை அளித்துக் காப்பான்

—கமபராமாயணம

*ஐம்பெரும் பூதங்களிலே ஒன்றாகியவாயுவின் புத்திரனாகிய அநுமன், ஐம் பெரும் பூதங்களிலே ஒன்றாகிய வானத்தின் வழியாக பஞ்ச பூதங்களிலே ஒன்றாகிய கடலைத் (திரை) தாவி, இராமபிரான் பொருட்டு ஒற்றனாக இலங்கை சென்று, ஐம்பெரும் பூதங்களிலே ஒன்றாகிய பூமி தந்த செல்வியைக் கண்டு, மாற்றார் ஊராகிய இலங்கையில், ஐம்பெரும் பூதங்களிலே ஒன்றாகிய தீயை வைத்தவனாகிய அந்த அனுமன் நமக்கு வேண்டுவனவற்றை அளித்து நம்மைக் காப்பானாகுக!*

# ஸப்தகிரி


**மே - 1990**

தனிபபிரதி ரூ. 1 — மலர் 20

வருடச் சநதா ரூ. 12 — இதழ் 12


## உள்ளுறை



---

### அட்டைப்பட விளக்கம்

| | |
|---|---|
| முனனடடை | தசபுஜ ஸ்ரீ ஆஞசநேயா<br>— சிததிரம - கே. ஜெகதீஷ |
| முதல் உளஅடடை | திருபபதியில ஸ்ரீ அனனமாசசார்யா<br>நினைவு நாள விழா நிகழ்சசிகள |
| 2-வது உளஅடடை | திருமலையில புதிய தி. தி தேவஸதான<br>செயலாட்சித தலைவா<br>திரு. எம.வி எஸ. பிரஸாத அவாகள |
| பின்னடடை | திருசசானூர் ஸ்ரீ பதமாவதி தாயாா<br>கோயில புஷகரணி |


*சறுபபாசிரியர்*

**திரு. எம். வி. எஸ். பிரஸாத்,**
I.A.S.,
செயலாடசித தலைவா,
தி.தி.தேவஸதானம, திருபபதி.

*அச்சிடுபவர்*

**திரு. எம். விஜயகுமார் ரெட்டி,**
மேலாளா,
தி.தி. தேவஸதான அசசகம,
திருபபதி.

*ஆசிரியர்*

**திரு. கே. சுபபாராவ், எம்.ஏ.**

*துணையாசிரியர்.*

**திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,**

**பிரதிகளுக்கு:**
EDITOR,
" Sapthagiri "
T. T. Devasthanams,
TIRUPATI.

# உங்களுடன் . . . .

மாற்றம் என்பது இயற்கையின நியதி. இயற்கை மாறுகின்றது; அதனாற்றான் பருவ, கால நேரங்கள மாறு கின்றன. மனிதன் மாறுகின்றான். அம்மாற்றம் அவனுள்ளும், வெளியும நடைபெறுகின்றது இவ்வித மாற்றங் களினாலதான் வாழ்க்கையும் மனிதனுக்குப் பிடித்திருக்கின்றது. இல்லையென்றால் அவனுக்குப் பித்தமே பிடித்து விடும்.

இவ்வகையில மனிதனால ஏற்படுத்தப்பட்ட சட்ட திட்டங்களும், வாழ்க்கை முறைகளும் அவ்வப்போது காலத் திற்கேற்றவாறு மாற்றங்களுடன் விளங்குவதால, மனிதனுக்கு வாழக்கையில் பிடிப்பும், எதிர் காலத்தில் நம்பிக்கையும் ஏற்படுகின்றன. இவற்றின இறுதி இலட்சியம் மனயமைதியும மகிழச்சியும்தான்.

இயற்கையால் ஆளப்படும் இம்மனித இனமும் தனக்கென ஒரு தெய்வத்தை - தலைவனை அமைத்துக் கொண்டு அவன்கீழ் ஆளுவதையே விரும்புகின்றது. ஒரு தலைவனின்கீழவாழந்திடும்போது. மனிதன் தன்வாழ்க்கைக்கு ஏதோ ஒரு உத்திரவாதம் அமைந்து விட்டதுபோல் நினைக்கின்றான் ஏனெனின தெய்வத்தின் நிழலாக-பிரதிநிதியாக தன தலைவனை மனிதன் நினைக்கின்றான. அத்தலைவனே அன்று அரசனாக மக்களுக்கெல்லாம விளங்கினான. மக்களின இன்பமும், துன்பமும், அவர்களை ஆளும் அரசனின்மீதும், அவன ஆட்சியினமீதும் ஆதாரப்பட்டிருந்தது. அவ்அரசனுக்குப் பிறகு இளவரசன பட்டத்திற்கு வருமபோது, ஆட்சியின தலைமையில மாற்றம் அமையும்போது, மக்கள் முன்பிருந்த ஆட்சியின்போது விளங்கிய குறைகளையும் தவிர்த்து மேலும் உன்னதமான ஆட்சியினையே விரும்பினர். பின்னர் மன்னராட்சி மறைந்து மக்களாட்சி மலர்ந்தபோது மக்களின் உரிமை நிலைநாட்டப்பட்டது; பொறுப்பும் உடன் சேர்ந்தது. தன வாழக்கையின்-நாட்டின் தலைவிதியினை நிர்ணயிக்கும வகையில் தகுந்த தலைவனைத தேர்ந்தெடுக்க ஆரமபித்தனா; தங்கள் வாழ்க்கையினை மேம்படுத்திக் கொள்ள விழைந்தனா.

இத்தகு மக்களாட்சி சமுதாய அமைப்பினகீழ பொது நிறுவனங்களும் தங்களுக்கென்று தலைவர்களைப் பெற்று அவர்களின்கீழ் நிறுவனங்கள் உயர்ந்திட, அந்நிறுவனங்களில் பணிபுரிவோரும் சிறந்திட வழிமுறைகள் ஏற்பட லாயின. ஒரு நிறுவனத்தின தலைவன் மாறும் போதெல்லாம், மாற்றப்படுமபோதெல்லாம் நிறுவனத்தின் நிருவாக செயல் முறைகளும், திறனும் மேலும ஒழுங்குப்படுத்தப்பட்டோ, மாற்றப்பட்டோ, குறைகள் களையப்பட்டோ அந்நிறு வனம் மேலும வளர்ந்திட வழி ஏற்படுகின்றன.

இவ்வகையில திருமலைக் கோயில் சோழ, பல்லவ, விஜயநகர பெருநில மன்னர்களின் கீழும, தொண்டை மண்டலம், ஆற்காடு நவாபு ஆகியோர் குறுநில மன்னர்கள் ஆட்சியின் போதும், அதனைத் தொடர்ந்து ஆங்கிலேயர் ஆட்சியின் கீழும் பல்வேறு காலங்களில் பலவாறு ஆளப்பட்டாலும் அன்றும் இன்றும் நாட்டின் பல்வேறு பகுதிகளி லிருந்து ஆயிரக்கணக்கான யாத்திரிகப் பொது மக்களைத் தன்பால் ஈர்த்துக்கொண்டு பழமையும் புதுமையும் கொண்டு நாளும் அதன் புகழ் ஓங்கி வளர்ந்துவரும் நிலையில் இருந்து வருகின்றது. அத்தகு திருக்கோயில இன்றைய மக்களாட்சி முறையின்கீழ் அறநிலையத்துறை எனும் அமைப்பினகீழ் திருமலை திருப்பதி தேவஸ்தானம எனும் ஒரு பெரிய இந்து சமய நிறுவனமாக விளங்கி, செயலாட்சித் தலைவர் எனும் அலுவலர் தலைமையினகீழ் பல்வேறு கட்டங் களில் அதன நிருவாக அமைப்பு மேமபடுத்தப்பட்டு வருகின்றது.

சுமார் நாற்பதாண்டு காலத்தில் பல்வேறு செயலாட்சித் தலைவர்களின்கீழ் தி. தி. தேவஸ்தானம் வளர்ந்து வந்துள்ளது. திருமலைக் கோயிலில் இறைவனைப் பல நிலைகளில் பக்தர்கள் கண்டுகளிக்கவும், கோயிலின் வருவாய் பெருகிடவும், ஆகம விதிமுறைகளுக்குட்பட்ட புதிய பல்வேறு சேவைகள எனும் சமய நிகழ்ச்சிகள ஒரு செயலாட்சித் தலைவரின் பதவிக் காலத்தினபோது புகுத்தப்பட்டன. திருமலைக்கு வரும் யாத்திரிகர்கள் பலருக்கும் தங்கு வசதிகள் அமைத்துக் கொடுக்கும வகையில காட்டேஜுகள, விருந்தினர் விடுதிகள், இலவச சத்திரங்கள் மற்றொரு அலுவலரின் முயற்சிகளால் மேலும் விரிவாக்கப்பட்டன. திருமலைக் கோயிலின வருவாய் நாட்டின் பல்வேறு பகுதிகளில வாழும் மக்களுக்கு மறைமுகமாய் பயனபடும் வகையில் திருமணக் கூடங்கள், தொடர்ந்து வந்த மற்றொரு அலுவலர் தலைமை யின்கீழ் கட்டப்பட்டன. திருமலைக் கோயிலின புகழ் மேலும் உயர்ந்திடும வகையில் வைகுண்டம் எனும் ‘க்யூ’ கட்டிடம, உணவுக் கட்டிடத் தொகுதிகள், எல்லாவற்றிற்கும் மகுடம வைத்தாற போன்று, மூலவருக்கு ‘வைரமுடி’ செய்வித்தது, உலகமே புகழும், சிறந்த தானமாகக்கருதப்படும, திருமலையில் நாளும ஆயிரக்கணக்கான யாத்திரிகர்கள் இலவசஉணவு பெற்றிடும வகையில், ‘அன்னதான’ திட்டம் அமுலாக்கப்பட்டது. ‘ஸப்தகிரி’ பத்திரிகையின் விற்பனை அதிகமாகும வகை யில் அத்துறையில் பல புது முயற்சிகள மேற்கொள்ளப்பட்டது ஆகியன பல்வேறு செயலாட்சித் தலைவர்களின் பதவிக் காலங்களில் நடைபெற்ற நிகழச்சிகளாகும்.

மேற் குறிப்பிட்ட திட்டங்கள் தொடர்ந்து செயற்படவும், குறிப்பாக திருமலையில் தங்கு வசதிகள மேலும் பெருகவும், அன்னதான திட்டத்திற்கான நன்கொடைத் தொகை ரூபாய் ஆயிரமாகவும இருக்கலாம் என்று அறிவித்த தன் மூலம் நடுத்தர மக்களும் இப்புனித திட்டத்தில் பங்கேற்கவும் வழி செய்து திருமலை திருப்பதி தேவஸ்தான நிரு வாக சரித்திரத்தில தனக்கென ஒரு தனி முத்திரையினைப் பதித்துக் கொண்டு, தற்போது பதவி மாற்றத்தால் இந்நிறு வனத்தை விடடுச் செல்லும் இதுவரை செயலாட்சித் தலைவராக பணிபுரிந்த திரு. சி. எச வெங்கடபதி ராஜு ஐ.ஏ.எஸ். அவர்கள் மேலும் பேரும் புகழும் அடைய வாழ்த்துகிறோம். பலவேறு அரசுத் துறைகளில் பல்வேறு நிலைகளில் நிரு வாகத் துறையில் தனக்கென ஒரு தனியிடத்தைப் பெற்று, தற்போது தி. தி. தேவஸ்தானத்தின புதிய செயலாட்சித் தலைவராகவும், ‘ஸப்தகிரி’யின் சிறப்பாசிரியராகவும பொறுப்பேற்றுக் கொண்ட திரு. எம். வி. எஸ். பிரஸாத் ஐ.ஏ.எஸ். அவர்களின் பதவி காலத்தில் தேவஸ்தான நிறுவனம் மேலும் சிறந்தோங்கிட, ‘ஸப்தகிரி’ மேலும் புதுப் பொலிவுடன் திகழ்ந்திட அன்னாருக்கு எங்கள் வாழ்த்துக்களைத் தெரிவித்து அன்புடன் வரவேற்கின்றோம்.

# செய்திச் சுருக்கம்

## வசந்தோத்ஸவம்

திருமலைகோயிலில் வருடாந்திர வசந்தோத்ஸவம் 7-4-90 முதல் மூன்று நாட்களுககு வெகுசிறப்பாகக் கொண்டாடப் பட்டது. 7-4-90 அன்று வசந்த மண்டபத்தில் உத்ஸவருக்கு திருமஞ்சனம நடைபெற்றது. பிறகு விலையுயர்ந்த அணிகல அலங்காரங்களுடன் உதஸவர் திருவீதி திருவுலா எழுந்தருளினார். 8-4-90 அன்று வெள்ளிரதத்தில் எழுந்தருளினார். 9-4-90 அன்று ஸ்ரீகிருஷ்ணர், ருக்மிணி, சீதா, ராமலக்ஷ்மணர் ஆகியோரின் உத்ஸவ மூர்த்திகளின் திருவீதி திருவுலா திருக்காட்சியினை ஏராளமான பக்தாகள் கண்டு களித்தனர். இவ்விழாவின்போது திருமலை திருப்பதி தேவஸ்தான செயலாட்சித் தலைவர் திரு. சி. எச். வெங்கடபதி ராஜு, ஐ. ஏ. எஸ்., இணை செயலாட்சித் தலைவர் திரு. டி. ஜனார்த்தன நாயுடு, திருமலை உதவி செயலாட்சித் தலைவர் திரு. பட்டாபிராம ரெட்டி மற்றும் பல உயர் அலுவலர்களும் பங்கேற்றனர்.

## திருமலையில்

இந்திய உச்ச நீதிமன்றத்தின் தலைமை நீதிபதி திரு. சவ்யசாச்சி முகர்ஜி அவர்கள் தன் துணைவியாருடன் திருமலைக்கு வருகைபுரிந்து இறைவனைத் தரிசித்தார். அதற்கு முன்பு நீதிபதி அவர்கள், ஆநதிர மாநில பஞ்சாயத்ராஜ் அமைச்சர் திரு. ஆர். செங்காரெட்டி, சித்தூர் மாவட்ட ஆட்சித் தலைவர் திரு. எம். நாகார்ஜுனா, தி. தி. தேவஸ்தான செயலாட்சித் தலைர் திரு. சி.எச். வெங்கடபதிராஜு ஆகியோர்களால் கோயில் மரியாதைகளுடன் வரவேற்கப்பட்டார்.

* * *

14-4-90 அன்று ஆந்திர மாநில உயர்நீதிமன்றத்தின் அட்வகேட் ஜெனரல் திரு. வேணுகோபால் ரெட்டி அவர்கள் திருமலையில் கோயில மரியாதைகளுடன் வரவேற்கப்பட்டார். பின்னர் அவர் ஸ்ரீ வேங்கடேஸ்வரரைத் தரிசித்தார். அன்று நடைபெற்ற ஸகஸ்ர தீபாலங்கார சேவையிலும் கலந்து கொண்டார்.

* * *

அணமையில் திருமலைக்கு வருகை புரிந்த தேசிய சுற்றுப்புற சூழ்நிலை மற்றும் பொறியியல் ஆய்வுக்கூடத்தைச் சேர்ந்த விஞ்ஞானி டாக்டர். கே. ஆர். புலுசு அவர்கள் செய்தியாளர்களிடையே பேசுகையில் திருமலையிலுள்ள பாப்நாசம் மற்றும் கோகர்ப்பத்திலுள்ள நீர், இந்தியாவிலுள்ள மற்றைய எல்லா நீர்நிலை நீரை விட மிகவும் சுத்தமானது என்று குறிப்பிட்டார், தி.தி.தேவஸ்தானம கேட்டுக்கொண்டதன் பேரில் நீரினை சோதனை செய்து இம்முடிவினை அவர் வெளியிட்டார்.

## யுகாதி ஆஸ்தானம்

திருமலைக்கோயில் பங்காரு வாயிலில் ஸர்வபூபால வாகனத்தில் ஸ்ரீதேவி பூதேவி சமேத ஸ்ரீவேங்கடேஸ்வரரின் உத்ஸவ மூர்த்திகள் எழுந்தருள புத்தாண்டு ஆஸதானத்தை இறைவன் அலஙகரித்தார். திருமலை ஜீயங்கார் அவர்கள் உத்ஸவ மூர்த்திகளுக்கு பட்டு வஸ்தரங்களை வழங்கினார். பின்னர் ஸ்ரீ வேங்கடேஸ்வரரின் ஜன்ம நட்சத்திரத்திற்கு ஆலய ஸிந்தாதிகள் ராசிபலன் வாசித்தனர்.

* * *

1-4-90 அன்று இலங்கையில் கடமை புரிந்து திரும்பிய இந்திய அமைதிப் படையைச் சார்ந்த சுமார் 250 இராணுவவீரர்கள் திருமலைக்கு வருகை புரிந்து இறைவனைத் தரிசித்தனர்.

* * *

1-4-90 அன்று திருமலை உண்டியலில் பக்தர் ஒருவர் 250 கிராம் எடையுள்ளதும், சுமார் ரூ. 75,000 பெறுமானதுமான தங்க இடைக்கச்சு (ஒட்டியாணம்) ஒன்றினைக் காணிக்கையாகச் செலுத்தியுள்ளார்.

* * *

தி. தி. தேவஸ்தானத்தின் புதிய செயலாட்சித் தலைவராக திரு. எம்.எஸ். பிரஸாத் அவர்கள 16-4-90 அன்று ஆந்திர அரசால் பதவி நியமனஞ் செய்யப்பட்டுள்ளார். பதவி ஏற்கும் முன்பு திரு. பிரஸாத் அவர்கள் 13-4-90 அன்று கால்நடையாக திருமலைக்கு வருகை புரிந்து இறைவனைத் தரிசித்தார்.

* * *

4-4-90 அன்று திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின் புதிய இணை செயலாட்சித் தலைவராக திரு. டி. ஜனார்தன நாயுடு அவர்கள் ஆந்திர மாநில அரசால் பதவி நியமனஞ் செய்யப்பட்டுள்ளார்.

* * *

இவ்வாண்டு கோடைக்காலத்தின் போது அதிகமாக எதிர்பார்க்கப்படும் யாத்திரிகப் பொதுமக்களின் வசதியைக் கருதி ரூ. 25/- அனுமதி சீட்டுப் பெற்று சிறப்பு நுழைவு வாயிலாக அனுமதிக்கப்படும் யாத்திரிகப் பொதுமக்கள் 12-4-90 முதற் கொண்டு திருமலை ஸ்ரீவராஹசுவாமி கோயிலுக்கருகே உள்ள பி.பி. கொட்டகைகளின் வழியாக தரிசனத்திற்கு அனுமதிக்கப்பட்டு வருகின்றனர்.

## திருமலை-திருப்பதி 21ஆம் ஆண்டு படிவிழா

திருப்பதி-திருமலை 21-ஆம்ஆண்டு படிவிழா 16-4-90 முதல் 18-4-90

(48-ம் பக்கம் பார்க்க)



# ஸ்ரீ ஹனுமத் ஜயந்தி

ஸ்ரீமத் ராமாயணம் என்னும் மணி ஹாரத்தில் நடுநாயகமாக விளங்குபவர் ஆஞ்சநேயர்!

ஸ்ரீமத் ராமாயணத்தில் ஸ்ரீ சீதா ராமருக்கு அத்யந்த பக்தராகவும் அரிய தொண்டராகவும் பாதசேவை புரியும் பரம பக்தராக விளங்குபவர், ஸ்ரீ ஆஞ்சநேய மகாப்பிரபு! அம்மகானுபாவன் எப்பொழுதும் நம்மோடு பிரத்யக்ஷ தெய்வமாக வாழ்ந்து வருகிறார்.

சுந்தர காண்டத்தின் சுந்தர புருஷனான வாயுபுததிரன் உதய சூரியனுக்குச் சமமானவர் — கோடி மன்மதனுக்கு ஒப்பான ரூபலாவண்யத்தைப் பெற்றவர் — கோடி சந்திரனுக்கு நிகரான குளிர்ந்த அருள் காந்தியைப் பெற்றவர் என்றெல்லாம் போற்றுதற்குரிய பரமாத்மாவானவர்.

அப்பெருமானது செஞ்சேவடிகளைக் சேவித்து சரணாகதி என அடைவோரக்குச் சஞ்சலங்கள் விலகும்; சகல சௌபாக்கியங்களும் பொங்கி நிலவும்.

சொர்ண குண்டலங்கள அணி செய்ய ஸ்படிகம் போன்ற திருமேனியில் மௌஞ்சி யக்ஞோபவிதம்விளங்க அபாரமான சக்தியோடு காட்சி தரும வாயு புத்திரனைப் பிரார்த்திப்போர்க்கு நல்ல ஆரோக்கியமும் ஆயுளும் விருத்தியாகும்.

வலது திருககரத்தில் கதையைத் தாங்கி அணி மார்பில் சீதாராமரைத் தாங்கித் திருத்தோற்றம் தரும் சிரஞ்சீவி ஸ்ரீராமபக்தஅனுமனை ஆராதிப்பவருக்கு அவர் அபயவரத ஹஸ்தம் அளித்து என்றென்றும் ஆனந்தம் பொங்க அருள் புரிகிறார்.

நவவியாகரண பண்டிதரும், சர்வ மந்திர தந்திரயந்திர சொரூபியுமாக நம்மோடு எழுந்தருளி என்றும் சிரஞ்சீவியாக வாழ்ந்து வரும் ஹனுமான் தமது அன்புபக்தர்களைக் காத்து ரக்ஷிக்க சதாசர்வ காலமும் சித்தமாயிருக்கிறார்.

மார்கழித் திங்கள மதி நிறைந்த நன்னாள் மூலநட்சத்திரம் கூடிய சுப யோக சுபதினத்தில், கலியுகத்தின் பிரத்யட்ச தெய்வமாக விளங்கும் அனுமான் அன்புக்கும், தொண்டுக்கும், வீரத்திற்கும் எடுத்துக்காட்டாக விளங்கும் உத்தம பிரபு-ஈரேழு பதினான்கு லோகங்களிலும் வியாபிப்பவன், இதிகாச புராணங்களில் இணையற்ற இடம் பெற்றிருப்பவன். பக்தர்களுக்கும் பக்தர்களின் தாசர்க

ளுக்கும் தாசன் - பிரும்மச்சரிய பொலிவின் மகாசமுத்திரமாகவிளங்குபவன். ஔஷதங்களிலே சஞ்சீவியாக இருப்பவன் - தேவ சிரேஷ்டன் - வீர தீர அனுமான் - வாயு தேவனின் அருளோடு சிவசக்தி சொரூபமான அஞ்சனா தேவியின் மணி வயிற்றிலிருந்து அவதரித்தவர்.

ஸ்ரீ ஆஞ்சநேய மகாப்பிரபுவின் ஜயந்தி ஜயந்திகளுக்கெல்லாம்ஜயந்தி அந்த ஜயந்தியை நாம் கொண்டாடுவதால் நமக்கு சகல மங்களங்களும் உண்டாகும். நினைத்த காரியம் கைகூடும். துன்பம் விலகும், குடும்பத்தில் இன்பம் பெருகும்.

ஆத்மபலம், மனோ பலம், புத்தி பலம், தேக பலம் பிராண பலம், சம்பத்பலம் ஆகிய அறுவகைப் பலங்களையும் நாம் நிரந்தரமாகப் பெறுவதற்கு 'சிறிய திருவடி' என்று அழைக்கப்படும் ஆஞ்சநேய மகாப்பிரபுவின் சீரிய திருவடியை நாம் பற்றிக் கொள்ள வேண்டும்.

ஸ்ரீ ராம பிரானின் அருளாணைப்படி சேதுசமுத்திரக் கரையில் அமர்ந்து ராம தியானம் செய்துவரும் சிரஞ்சீவி மாருதி, ராமநாமம் ஒலிக்கும் இடமெல்லாம் எழுந்தருளுகிறார். ஸ்ரீ ராமநவமி உற்சவம் கொண்டாடும் இடங்களிலெல்லாம் அடியார்களுள் அடியாராய் — பக்தருள் பக்தராய் ஆஞ்சநேயர் நேரில் வந்து அனைவருக்கும் சகல சந்தோஷங்களையும் சுபிட்சங்களையும் வாரி வழங்கும் பேரருள் புரிகிறார்.

இதனால்தான் துளஸிதாஸர் ஸ்ரீ ராமாயண பிரவசனம் தொடங்கும் முன்னர் பக்தர்களை ப்ரதக்ஷிணமாக வருவார். அந்த பக்தர்களோடு பக்தராக மாருதி எழுந்தருளியிருப்பார் என்பது அவருக்குத் தெரியும்!

அனுமான் அன்பின் வடிவம் - அறத்தின் வடிவம் - அருளின் வடிவம் ஆனந்தத்தின் வடிவம் - இன்பத்தின் இருப்பிடம் - இகபர சுகத்தின் உருவம் - ஈகையின் ஈடில்லாத் தலைவன் - உத்தம குணத்தோடு கூடிய உதார புருஷன் - ஊர்த்தவ மூர்த்தியின் மோகன வடிவம் - எங்கும் நிறைந்திருக்கும் எழில் வடிவம் - ஏகாந்த சேவையால் எழுந்தருளிய ஞான வடிவம் - ஐஸ்வர்யங்களை அள்ளித்தரும் காமதேனு - ஒப்பற்ற வரம் தரும் கற்பகத்தரு - ஓங்கார ரூபத்தின் சிருங்கார வடிவம் - ஔஷதமாக வந்தருளும் அமுத கலசம் - என்றெல்லாம் அஞ்சநேய பெருமானை வார்த்தைகளால் உள்ளன்போடு பிரார்த்தித்துக் கொண்டே இருக்கலாம்.

ஆஞ்சநேயரை ராம நாமத்தால் சேவிப்பதோடு வடை மாலை சாத்தி வெற்றிமாலை அணிவித்து வெண்ணெய் சாத்தியும் ஆராதிக்க வேண்டும். வாலில் குங்குமப் பொட்டு வைத்து தியானித்தும் பூஜிக்கலாம்.

அவல், சர்க்கரை, தேன், பானகம், நீர்மோர், கதலிபபழம், கடலை முதலிய நிவேதனப் பொருட்களை அவர் விரும்பி அமுது செய்து அகமகிழ்வர்.

வடை மாலை :

சீதாபிராட்டியார் பரிசளித்த முத்து மாலையைச் சுவைத்து, ராம ராம சுகம் அதில் உள்ளதா என்று பார்த்து பிய்த்து எறிந்தவர் ஆஞ்சநேயர். அது போலவே வடைமாலையையும் அவர் கழுத்தில் போட்டவுடன் சுவைத்துப் பார்த்துப்போட்டு விடுகிறார். அவர் திருவமுது செய்த அந்த உச்சிஷ்டம் எத்துணை விசேஷமானது!

மாலை போல் கோத்துக் கழுத்தில் போடுவதற்கு உகந்தது, நடுவே துவாரம் உள்ள வடை ஒன்றுதான்.

கொழுப்பு நிறைந்த அரக்கர்களைப் போர்க்களத்திலே தமது புஜபலத்தால் வடை தட்டுவதுபோல் தட்டி சம்ஹாரம் செய்தவர் ஆஞ்சநேயர். எனவேதான் கொழுப்புசத்து நிறைந்த உளுந்தைச் சேர்த்து அவருக்கு வடைமாலை செய்து சாத்துகிறார்கள்.



போர்க்களத்திலே வெற்றிக்கொடி நாட்டியவர் அனுமார். அதனால் தான் அவருக்குக் கொடியிலே வளரும் வெற்றிலையை மாலையாகப் போடுகிறார்கள்.

ஸ்ரீராமருக்குக் கொடியாக நின்ற மாருதி பாரதப் போரில் அர்ஜுனனின் ரதத்திற்கு வெற்றிக்கொடியாக உயர்ந்து, அர்ஜுனனுக்குக் கண்ணன் செய்த கீதா உபதேசத்தைத் தமது செவிகளில் கேட்டு ஆனந்தித்து அர்ஜுனனுக்கு வெற்றியைத் தேடிக் கொடுத்த வீரத்திருமகன் ஆஞ்சநேயர்! அவருக்கு வெற்றி மாலை போடுவதுதானே விசேஷம்.

வெற்றிமாலை போடும் வழக்கம் ஆந்திரப்பிரதேசத்தில் மிக அதிக மாக உள்ளது.

அசோக வனத்தில் சீதாதேவியார் அனுமானை வெற்றிலைக் கொடியி லிருந்து, வெற்றிலை எடுத்து அவ ரது சிரசில் போட்டு "சிரஞ்சீவியாக இருப்பாயாக!" என்று அனுக்கிரஹித் தார்களாம்.

வெண்ணெய் சாத்துதல்

வெணணெய் சாத்தி ஆஞ்சநேயரை வழிபடுவதும் விசேஷமாகும்.

ஸ்ரீராம நாமத்தினுள் இருப்பவர் மாருதி. ராம நாமத்தினை இடை யறாது ஜபித்துக் கொண்டே இருந் தால், ஆஞ்சநேயரின் பேரருள் நமக் குத் தானாகவே கிட்டும். வெண் ணெய் எப்படி உருகுகிறதோ அது போல் நமது ராமநாமஜெபத்தால் அவர் உள்ளம் உருகுகிறார். நமக்கு உன்னதான மார்க்கத்தைக் காட்டி யருள்கிறார்.

வெண்ணெய் மிகவும் குளிர்ச்சி. போர்க்களத்திலே ஆஞ்சநேயர் பாறைகளையும், மலைகளையும் பெயர்த்து எடுத்துப் போர் செய் தார். அவரது திருமேனிக்குக குளிர்ச்சி ஏற்படுவதற்காகவே வெண் ணெய் சாத்தி வழிபடுகிறோம்.

அவரதுதிருமார்பிலே வெண்ணெய் சாத்துவது, ஸ்ரீ ராமபிரானின் திருவடிகளுக்கு வெண்ணெய் சாத்து வது போலாகும். போர்க்களத்தில் ஸ்ரீராமபிரான் ஆஞ்சநேயர் தோள் மீது எழுந்தருளிப் போர் செய்தார். அவரது திருப்பாதம் "மாருதியின் அணி மார்பில்தானே இருந்திருக் கும்!

ஐயன், தேவியைத் திருமார்பிலே கொண்டுள்ளான். மாருதியோ தேவ னையே திருமார்பில் கொண்டுள்ளான்

மேலும் கண்ணனுக்கும் மாருதிக் கும் பல விதத்தில் ஒற்றுமைகள் உண்டு.

இருவரும் பாரிஜாத விருக்ஷத்தின் அடியில் வாசம் புரிபவர்கள்.

கண்ணன் பார்த்தனுக்குச் சாரதி யாக இருந்தார்; மாருதி பார்த்த னுக்கு வெற்றிக் கொடியாக நின்றார்.

கண்ணன், நண்பர்களான பாண்ட வர்களுக்காக துரியோதனிடம் தூது சென்றார். ஆஞ்சநேயர் தன்தலைவ ரின் நண்பர்களான ராமலக்ஷ்மணர் களுக்காக இராவணனிடம் தூது சென்றார்.

கண்ணன், கோவர்த்தனமலையைக் குடையாகப் பிடித்து கோகுலத்துப் பாலகர்களைக் காத்தார். மாருதி சஞ்சீவி மலையைத் தூக்கி வந்து அயோத்தி பாலகர்களைக் காத்தார்.

இருவரும் விஸ்வரூப தரிசனம் தந் தவர்கள்.

இப்படிக் கண்ணனும் மாருதியும் ஒற்றுமையோடு இணைந்திருப்பதால் தான், வெண்ணெயை மாருதிக்கு சாத்தி வழிபடுகிறார்கள்.

குங்குமப் பொட்டு;

வாலில் குங்குமம் வைத்து வழிபடு வதின் தாத்பரியம் என்னவென்றால் அனுமாருக்கு வாலில்தான் சக்தி அதிகம்.

பக்தி சிரத்தையுடன் ராம நாமத்தை ஜபித்துக்கொண்டு இடுப் பில் வால் தோன்றும் திருவிடத்திலி ருந்து தினமும் சந்தனம் சாத்தி குங் குமத்திலகம் வைத்துக்கொண்டு வர வேண்டும். வாலின் நுனியை அடைந்ததும், கலைத்துவிட்டு மறு படியும் பொட்டு வைக்க வேண்டும்.

வால்முனையில் பொட்டு பூர்த்தி பெறுகின்ற சுபதினத்தில், எம்பெரு மானுக்கு வடை மாலை சாத்தி, உப் பில்லா திருவமுது நிவேதிக்க வேண் டும்.

காரியம் சித்தியாகும் வரை இவ் வண்ணம் பொட்டு வைத்துக் கொண்டே வரவேண்டும்.

அசோகவனத்தில், சீதாபிராட்டி யார் வெற்றிலைச் சாற்றினால், அனு மானின் திருவுருவத்தை எழுதினார் கள். தினமும் அவரது வாலிற்கு செம்மண்ணைக் குழைத்து பொட்டு வைத்து பூஜித்து வந்தார்கள். அவர் களுக்கு வெற்றி கிட்டியது போல் அனைவர்க்கும் வெற்றி கிட்டும்.

நம்பிக்கையுடன் செய்கின்ற எந்த நற்காரியத்துக்கும் வெற்றி நிச்சயம்.

பூஜை செய்வதற்கு, இந்த ஆஞ்ச நேயர் படம்தான் விசேஷம, அந்த ஆஞ்சநேயர் படம்தான் விசேஷம் என்று ஒன்றும் கிடையாது.

ஆஞ்சநேயர் அன்புத் தொண்டர் களின் பக்திக்குக் கட்டுப்பட்டு எந் தப்படத்திலும் எழுந்தருளி நம்மைக் காத்தருளுவார்.

ஸ்ரீ ஹனுமானின் துவாதச நாம மந்திரத்தை அனுதினமும் துயில் கொள்ளப் போகும்போதும் துயின்று எழுந்தபின்னும் யாத்திரையின் பொழுதும் பாராயணம செய் வோர்க்கு எவ்விதப் பயமோ துன் பமோ ஏற்படாது.

ஆஞ்சநேயரை அஷ்டோத்திரங் களாலும், சகஸ்ரநாமாவளிகளாலும் ஸ்லோகங்களாலும் மகா மந்திரங் களாலும் கவசங்களாலும், பூஜா விதானங்களாலும், ஸ்துதி மாலை களாலும் சேவித்து வழிபடலாம்.

ஆஞ்சநேயர் நம்மீது வாத்ஸல்ய மும், சந்தோஷமும் கொண்டு நமக் குத் தேவையான அத்தனைச் செல் வங்களையும் வாரி வாரி வழங்கி நம் முன்னே வள்ளலாக எழுந்தருளுவார்.

---

திருமதி. கே. தேவகி - திருப்பதி.



ஓம ஸ்ரீ மாத்ரே நம:





# பொதுமக்களுக்கு ஓர் அரிய நற்செய்தி



**ஸ்ரீ காஞ்சி ஜகத்குரு ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள், திருமுருக கிருபானந்தவாரியார் மற்றும் பல மகான்கள் ஆசி வழங்கிய நவசக்தி நிலையத்தாரால் உருவாககப்படும் பூஜைக்கு உரிய தெய்வீக சாதனங்கள்.**

| வ.எண். | யந்திரங்களின் பெயரும் அதன் பலனகளும் | விலே ரூ.பை. |
|---|---|---|
| 1. | பூர்ண ஸ்ரீ சக்கர மகாமேரு பஞ்சலோகம அனைத்துத் தெய்வங்களும் இதில் அடங்கியது (மர பீடம் உட்பட) 6½×6½ செ. மீ. ரூ. 750/- 5×5 செ. மீ. | 450-00 |
| 2. | ஸ்ரீ மகா கணபதி 8×8 செ. மீ. எந்தக் காரியமும் தடையின்றி நடக்க | 130-00 |
| 3. | ஸ்ரீ சக்கரம் 8×8செ.மீ. அனைத்து தெய்வங்களும் இதில் அடங்கியது | 130-00 |
| 4. | ஸ்ரீ மகாலட்சுமி மகாயந்திரம் 24×24 செ. மீ. 300 ஆண்டுகளுக்கு லட்சுமி கடாட்சத்தை ஏற்படுத்தி நிலைத்திருககச் செய்யும் (கோல்ட் பிரேம்) | 1150-00 |
| 5. | சர்வ ஜன மன தன ஆகர்ஷணம் ஸ்ரீ சாம்ராஜ்யலட்சுமி ஸ்ரீ மகா சுதர்சனம் 16×48 செ. மீ. (கோல்டு பிரேம்) (மூன்று யந்திரங்கள் சேர்த்து) வியாபாரத்தில் விருத்தியடையவும் லட்சுமி கடாட்சம், பண வரவுக்கும், எதிரிகள் பொறாமை இவைகளை நீக்கி சுபிட்சத்தைஉண்டுபண்ணும் | 1750-00 |
| 6. | சர்வ ஜன மன தன ஆகர்ஷணம் சாம்ராஜ்ய லட்சுமி ஸ்ரீ சுதர்சனம் 8×24 செ. மீ. (கோல்டு பிரேம்) மேற்கண்ட பலனை தரவல்லது | 500-00 |
| 7. | சூலினி, சரபேஸ்வரர், ப்ரதியங்காரா 8×24 செ.மீ. (கோல்டு பிரேம்) | 500-00 |
| 8. | சூலினி, சரபேஸ்வரர், ப்ரதியங்காரா, 16×48 செ. மீ. (கோல்டு பிரேம்) மூன்று யந்திரங்கள் சேர்ந்தது வியாபாரததிலோ, வீட்டிலோ நவக்கிரக தோஷங்களை நீக்கி எதிரிகள் இல்லாமல் செய்யவும் பில்லி, சூனியம், ஏவல்களை நீக்கி, லட்சுமி கடாட்சம் தரவல்லது. | 1750-00 |
| 9. | ரசமணி ஒன்றின் விலை ரூ. 250/-, ரூ. 500/- இது மனதை ஒரு நிலைபடுத்தும், சர்வ காரிய சித்தியும் சுகபோக பாக்கியங்களையும் தரவல்லது. | |
| 10. | கண் திருஷ்டி ஒருபுறம். மறுபுறம் சுதர்சன டாலர். கண் திருஷ்டியால் ஏற்படும் தொல்லைகளை நீக்கி எதிரிகளிடமிருந்து பாதுகாக்க வல்லது. | 70-00 |
| 11. | ஸ்ரீ சக்கரம் ஒருபுறம், மறுபுறம் ஸ்ரீ காமாட்சி டாலர். அம்பாள் கடாட்சத்தை ஏற்படுத்திச் சிரமங்களை நீக்க வல்லது. | 70-00 |
| 12. | ஸ்ரீ காமட்சி ஒருபுறம், மறுபுறம் தனகர்ஷண டாலர். அம்பாள் கடாட்சமும், பொருள் வரவும் தரவல்லது. | 70-00 |
| 13. | சௌடாம்பிகை மாங்கல்ய பாக்கிய டாலர். அம்பாள் கடாட்சமும், பெணகள் தீர்க்க சுமங்கலியாக இருக்கவும், கணவனுக்கு அதிர்ஷ்டத்தை உண்டாக்கவும் வல்லது. | 70-00 |
| 14. | விவாகப்ராப்தி டாலர். தடைப்பட்டு வந்ததிருமணம் தடையின்றி நடக்கும் | 70-00 |
| 15. | ஸ்ரீ சக்கரம் லட்சுமி பீஜம் டாலர் அம்பாள் கடாட்சத்தை நிலைத்திருக்கச் செய்யவல்லது | 70-00 |
| 16. | கண் திருஷ்டி படம் (கோல்டு பிரேம்) வீட்டிலும் வியாபாரத்திலும் வைப்பதால் கண் திருஷ்டி தொல்லைகள நீக்கி விபத்துக்களைத் தடுத்துக் காப்பாற்ற வல்லது | 70-00 |
| 17. | தத்தாதரேயர் யந்தரம் 12×12 செ. மீ. (கோல்டு பிரேம்) கண திருஷ்டி, பொறாமை, துர்தேவதைகளால் ஏற்படும் தொல்லைகளே நீக்கிக காப்பாற்ற வல்லது | 150-00 |
| 18. | பூஜைக்கு உரிய பஞசாயதன செட்டும், பாணலிங்கம், ஸ்படிக லிங்ககம் பலவிதமான மாலைகள் மாலைகள் சுத்த வெள்ளியால செயயப்பட்டவையும் இனனும் பலவிதமான சாதனங்களும் கிடைக்கும் பூஜைக்குரிய பாதுகை இங்கு கிடைககும். | |

கோவில்களுக்கு வேண்டிய சகல யந்த்ரங்களும், கிராம தேவதைகளுக்குரிய சகல யந்தரங்களும் கிடைக்கும். ஒன்றின் விலை ரூ. 105/- ஸ்பெஷல்: கோவிலில் ஜன ஆகர்ஷணம், தன ஆகர்ஷணம் செய்யக்கூடிய யந்தரத்தில் விலே ரூ. 300/- வெளிநாட்டுக்கு 25% அதிகம். விலேப்பட்டியலுக்கு 0-50 பைசா தபால் தலையுடன் கீழ்க்கண்ட விலாசத்திற்கு விண்ணப்பிக்கவும. மேற்கண்ட யந்திரங்களின் பலன்களை ஓரளவுதான் பத்திரிகைகளில் தெரிவிக்க முடியும்.


ஸ்வாமிஜி ஸ்ரீ முருகபூஷணம்

ஸ்ரீ வித்யா உபாசகர், தலைவர் நவசக்தி நிலையம்,

153, லாயட்ஸ் ரோடு, (ஸ்டேட் பேங்க் எதிரில்), கோபாலபுரம், சென்னை - 600086.

**போன்: கடை ... 472013 மா மேரு டிரஸ்டு வீடு: ... 861254**


**" லோகாஸ் சமஸ்தாஸ் சுகினோ பவந்து "**

# காவியம் காட்டும் காட்சிகள்

முன்னுரை :

உலக காவியங்களிலும் இதிகாசங்களிலும் நிகரில்லா புகழ் பெற்றது கம்பராமாயணம் ஆகும். கம்பர் தன் காவியத்திற்கு இராம அவதாரம் என்று பெயரிட்டார். இராமயணத்தின் பெருமையையும் புகழையும் பல்வேறு புலவர்கள் பாடிய பாடல்கள் நமக்கு உள்ளங்கை நெல்லிக் கனி போல் உணர்த்துகின்றன.

நம் இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற கவிஞர் பாரதியார்,

“ யாமறிந்த புலவரிலே கம்பனை போல்
வள்ளுவனைப் போல்”

எனக் கம்பருக்கு முதலிடம் தந்து பாராட்டுகிறார்.

அதுபோலவே,

“ கல்வியிற் சிறந்த தமிழ்நாடு புகழ்
கம்பன் பிறந்த தமிழ்நாடு”

என்ற பாடலிலும் கம்பனை முன் வைத்து பாடி அவன் பெருமைகளை உலகறியச் செய்துள்ளனர்.

பழம் பெரும் புலவர்கள் கம்பரும் திருவள்ளுவரும் ஆவார்கள் எனக் குறிப்பிடுகிறார்கள். இத்தகைய பழமையும் பெருமையும் தன்னகத்தே கொண்ட ஒப்புயர்வு பெற்ற இக்காவியத்தில் கம்பர் தன் கவிதை மழையைப் பெய்து சிறப்புச் சேர்த்துள்ளார்.

கம்பரின் உவமை நயம் :

கம்பர் தாம் பாடிய இராம அவதாரத்தில் ஆங்காங்கு தன் சொல் அம்புகளை வைத்து நம் செவிகளைத் துளைத்துள்ளார். அவர் அவை யடக்கமாக கூறிய பாடலில் ஒரு சிறந்த உவமையை எடுத்துக் கூறுகிறார்.

“ ஓசை பெற்று உயர் பாற்கடல் உற்று ஒரு
பூசை முற்றவும் நக்குபு புக்கென
ஆசை பற்றி அரைலுற்றேன்மற்று இக்
காசு இல் கொற்றத்து இராமன் கதை
அரோ”

(பாலகாண்டம் 4)

இதில் பாற்கடலை அடைந்து அதில் உள்ள பால் முழுவதையும் குடிக்க முற்படும் பூனையைப் போல் நான் இராமனின் கதையைச் சொல்லலுற்றேன் என்கிறார்.

கம்பரின் வருணனைத் திறம் :

கம்பரின் வருணனைத் திறம் அவர் கோசல நாட்டு மருத நிலத்தை வருணிக்கும் பண்பால் நாம் நன்கு உணரலாம்.

“ தண்டலை மயில்கள் ஆட தாமரை
விளக்கம் தாங்க
கொண்டல்கள் முழவின் ஒங்ககுவளை
கண்விழித்து நோக்க
தெண்திரை எழினி காட்ட தேம்பிழி
மகரயாழின்
வண்டுகள் இனிது பாட மருதம்
வீற்றிருக்கும் மாதோ”

(பாலகாண்டம் 36)

‘சோலை என்னும் நாடக அரங்கத்தில் மயில்கள் என்ற ஆடல் அழகிகள் ஆட, தாமரைக் கொடிகளாகிய பணிப் பெண்கள் தாமரை மலர்கள் என்னும் விளக்குகளை ஏந்தி நிற்க, மேகங்கள் மத்தளங்கள்போல் ஒலிக்க, நீரில் தோன்றும் அலைகள் திரைச் சீலைகளாக விளங்க, இனிய மகர யாழை போன்று வண்டுகள் பண் இசைக்க கருங்குவளைகள் என்னும் பார்வையாளர்கள் கண்களை மலர்த்திப் பார்க்க மருத மன்னன் கொலு வீற்றிருக்கிறான் ’என தசரத மன்னனின் ஆட்சிச் சிறப்பையும், அச் கோசல நாட்டு மருத நிலத்தின் மாண்பையும் தெள்ளத்தெளிவாக உணர்த்துகிறார்.

கம்பா கோசல நாட்டை வருணனை செய்யும் போது கோதாவரி நதியின் தொன்மையையும் அதன் இயற்கை அழகையும் விவரிக்க வந்தவர் ‘கோதாவரி ஆறு சடாயு பறித்தெறிந்த இராவணனின் இரத்தம் தோய்ந்த மணிமாலை போன்றும்,

திரு. ச. பஞ்சாபகேசன்,
திருச்சி

இராவணனால் கவர்ந்து செல்லப் பட்ட சீதையின் கூந்தலில் இருந்து நழுவி விழுந்த மாலைபோன்றும் ஒடுகிறது என்று கோதாவரி நதியின் தன்மையை நம் கண்கள் முன் கொண்டு வந்து நிறுத்துகிறார்.

கம்பர் இராமனின் பெருமையை விளக்க வரும்போது அதை விசுவாமித்திரர் வாயினால் புகழ வைக்கிறார். இராமனின் கை வண்ணமாகிய வில்லின் பெருமையை தாடகையை வதைத்த இடத்திலும், அவன் கால் பாதங்களின் பெருமையை அகலிகை சாப விமோசனம் பெற்ற இடத்திலும் நன்கு உணர்ந்து கொண்டேன் என்கிறார்.

சந்திரசயில மலையின் வனப்பையும், அதன் செல்வ வளத்தையும் மக்களின் செல்வச் செழிப்பையும் கூற வந்த கம்பர்,

“ மின் எனும் பிடிகளோடும் விளங்கும்
சுவண் மதிநல் வேழம்
கூனல் வரன் கோடு நீட்டி குத்திட
குமிறிப்பாயும்

## இதயம்

இதயம் இல்லாமல் வெறும் புத்திக் கூர்மை மாத்திரம் இருநதால் அது ஒருவனை அதிகச சுயநலமுடையவனாகத்தான செய்யும். இதயம் ஒன்று சொல்லி, புத்தி வேறு ஒன்று உரைப்பின், இதயத்தையே பின்பற்ற வேண்டும். இதய பூர்வமான உணர்ச்சி ஒருவனை மிக உயர்நத நிலைககுக் கொண்டு போகும். புத்தியால எப்பொழுதும் அவ்வளவு உயர்ந்த நிலைக்கு அழைத்துச செல்ல முடியாது

## கல்வி

மனிதனுக்குள் புதைந்திருக்கும் பூரணத்தை வெளிப்படுத்துவதே கல்வி எனப்படும். அறிவு மனிதனிடத்து இயல்பாக அமைந்திருப்பது. எல்லையற்ற அறிவுக்களஞ்சியமாகிய ஆன்மாவை மூடியிருககும் அறியாமைத் திரையை நீக்குதலே 'கற்றல்' என்பதன் பொருளாகும்.

ஒரு செடியை அதன் இயற்கையைமீறி வளரச் செய்ய முடியாது; அதைப் போலவே குழந்தைக்கும் கல்வி புகட்டுதலும். செடி தன் இயற்கைப்படி தானே வளரும்; அங்ஙனமே குழந்தையும், தன் இயற்கையை ஒட்டியே சுயமாகக் கற்றுக் கொள்ளுகிறது.

## ஆசை

வருவதெல்லாம் வந்து, போவதெல்லாம் போகட்டும்; ஆசையென்னுங்கரங்களை நீட்டி அவற்றைப்பற்ற நினையாதே. ஏனெனில் அங்ஙனம் நினைத்த மாத்திரத்தே துன்பம் வந்தெய்தும்.

—சுவாமி விவேகானந்நர்.

தெரிந்து கொள்ளுங்கள :

## விழித்தவுடன் பார்க்கத் தக்கவை

தாமரை, பொன், விளக்கு, சூரியன், சந்தனம், கடல், கன்றை-ஈன்ற பசு, வலக்கை, கற்புடைய பெண்டிர், மிருதங்கம், கண்ணாடி, காட்டு யானை, கருங்குரங்கு, இறை நூல்கள், தனது வலது தோள் முதலியன.

## ஆயுளை விருத்தி செய்வன

1. மாலை வெயில்
2. ஓமப்புகை
3. தெளிந்த நீர
4. இரவில் பால் சோறு உணணல்
5. பெரியோர்களை வணங்குதல்
6. நோயாளருக்கு உதவுதல்

## அபிஷேகம் செய்வதன் கருத்து

திருவருள் ஞானமே நீர் எனப் பாவித்து, மருள் ஞானமே மலம் ஆதலால் அம்மல அசுத்தத்தை அருள் நீர் கொணடு சுத்தி செய்தல் எனும் பாவனையே அபிஷேகம் செய்வதன் உட்கருத்தாகும்.

திருமதி. கமலா மாரியப்பன்-கோயம்புத்தூர்.

தேன உரு மடையை மாற்றி செந்
திணைக் குறவர் முந்தி
வானநீர் ஆறுபாய்ச்சி ஐயவனம்
வளாப்பர் மாதோ!''

என்கிறார்

நட்சத்திரம் போன்ற பெண் யானைகளுடனே விளங்கும் வெள்ளை நிலா என்னும் நல ஆண்யானை தன் வளைந்த பிறை போனற தநதத்தை நீட்டித் தேன் கூடுகளைக் குததின. அதனால விரைந்து பாயும் தேனாறு திணை பயிருக்குப்பாயுமாறு மாறறும் குறவர்கள் ஆகாய கங்கையின் நீரைப் பாய்ச்சி ஐவணம் எனனும் மலை நெல்லை வளர்ப்பார்கள் என்று வருணனை நயம் சொட்டப் பாடி இருப்பது மகிழத் தக்கது.

கம்பரின் வருணனைத் திறத்திற்கெல்லாம் மணிமுடி வைத்தது போல் உள்ள இடம் சீதையின் திருமணக் காட்சி ஆகும். சீதை கையில மலர் மாலையுடன் வருகிறாள். அவள், தான் மிதிலை நகரத்தில் முன புகுந்த வணவா தான் வில்லை வளைத்தவனா? என்று குழம்பிப்போய் நிற்கிறாள். பின் திடீரென தன் கையை நேராக வைத்து அனைத்து வளையல்களை எல்லாம் ஒரு பக்கமாகக்கொணடு வருகிறாள். அதில் இராமன பிம்பத்தை பார்த்தாள். உடன் தாவிச் சென்று மாலையிட்டாள்.

''எய்ய வில் வளைத்ததும் இறுத்ததும்
உரைத்ததும்
மெய்விளை இடத்து முதல ஐயம்
விடலுற்றாள்
ஐயனை அகத்து வடிவே அல புறத்தும்
கைவளை திருதது புகடைக் கணின்
உணர்ந்தாள்.''

இதை, சீதை கை வளையில்களை திருத்தும் நிமித்தமாக தன் ஓரக் கண்களால் இராமனைக் கண்டாள் என்றும் பொருள் கண்டு சுவைத்து இன்புறலாம்.

**கடல் வாணிகம் :**

கம்பர் காலததில் கப்பல்கள மற்றும் சிறிய படகுகள் மூலம் வாணிகத் தொடர்பு இருந்தது என்பதை அவர் பாடல் மூலம் உணரலாம.

"பொறை தவிர்ந்து உயிர்க்கும் தெய்வப்
பூதலம தன்னில் பொன்னின்
நிறை பரம சொரிந்து வஙகம் நெடு
முதுகு ஆற்றும் நெய்தல்
(பாலகாணடம் 51)

இதில் கப்பலானது தன் பாரமாகிய பொன் சுமந்து வந்த களைப்பைஇறகசி இளைப்பாறுகிறது என்று கூறி நம்மை மீளா இன்பத்தில் மிதக்க வைக்கும் கம்பரின் கவிதை உள்ளம் மிகப்பெரிது.

**கொடிக் காட்சி**

இராமன் தன் தமையனோடும் விசுவாமித்திர முனிவரோடும் மிதிலையை அடையும்போது மிதிலை மாநகரில் உளள மாட மாளிகையின் மீது உள்ள கொடிகள் எல்லாம் இராமனை வா! வா! என்று அழைப்பது போல் அசைந்தன என்று ஒரு கற்பனை நயம் சொட்டக் கம்பர் கவிதை வடிக்கிறாா.

மை அறு மலரின் நீங்கியான் செய்மா
தவத்தின் வந்து
செய்யவள் இருந்தாள எனறு செழு
மணிக் கொடிகள எனனும்
கைகளை நீட்டி அந்த கடிநகர்
கமலச் செங்கண்
ஐயனை ஒல்லை வா என்று அழைப்
பது போனறது அம்மா!

இதில் 'இலக்குமியாகிய சீதை இந் நகரில் அவதரிததுள்ளாள. எனவே நீ விரைந்து வநது அவளைத் திருமணம செய்து கொளவாயாக' என்று கொடிகள் இராமனை அழைப்பது போன்று பாடிய கம்பனின் கவி யுள் ளம் போற்றற்குரியது.

**மாடக்காட்சி :**

இராமன், மாட மாளிகையான அரண்மனையின் உப்பிரிகை சமீபமாக வரும்போது மேல் மாடத்தை நோக்கினான. அங்கு இருநது சீதையும இராமனை நோக்கினாள். இருவரும கணகளால் மாறிமாறி உளளம புக்கினார்கள. இதை விளக்க வந்த கம்பர்,

"அணணலும நோக்கினான் அவளும் நோககினாள்" என்று அழகுபட உரைக்கிறாா.

**வில் உடைத்தக் காட்சி :**

இராமன சிவதனுசு என்னும் வில்லை உடைத்த திறமையைப் பாட வந்த கம்பர்,

'எடுத்தது க ...டனர் இற்றது கேட்டனர்'

என்று பாடுகிறார்.

இராமன் வில்லை சீதைக்கு சூட்டும் மாலையென எடுத்தான். அவன் உடைத்ததை யாரும் நோக்கிலர் என்று கூறி நம்பியின் விலலாறறலை அழகு பட உரைக்கிறார்.

**மாதர்களின் நடை அழகு :**

கம்பர் தன காவியத்தில் பெண்டிர் களின் நடையை அன்னங்களின் நடையோடும் மயில்களில் நடையோடும் ஒப்பிட்டுப் பேசுகிறார்.

மாதர்களின் நடையைப் பார்த்து அன்னங்கள் தோற்று அவமானத்தால் அங்கிருநது அகலும் என்று பாடுகிறார்.

ஒண் சிலம்பு அரறறு மாதர் ஒதுஙகி
தோறு ஒதுங்கும் அனனம

என்று பாடுகிறார்.

மேலும் மகளிரின் ஈகை குணத்தைக் கூற வந்த கம்பர்,

தன்னைக் கண்டாள் மென் நடை
கண்டாள் தமரே போல்
துன்னக் கண்டாள் தோழமை
என்றாள துணை என்றாள்
உன்னைக் கண்டார் எள்ளுவர் பொல்
லாது உடு நீ என்று
அன்னக் கன்னிக்கு ஆடை அளிப்பாள்
அமைவாளும்

எனத் தனனை நெருங்கிவரும் அ... னத்தை ஒருத்தி உறவினள் எ... றாள். அதை நோக்கி 'நீ ஆடை இலலாமல இருப்பதைப பார்த்தா... பரிகசிப்பர்' எனறு தன் ஆடைகளை அவ் அன்னத்திற்கு அணிவி... தாள் என்று பெணகளின ஈகைகுண... தைக் கம்பர் சுட்டுகிறார்.

**இராமனின் அழகு :**

இராமன் மிதிலை மாநகரத்து வீதி களில் வலம் வந்த போது அவனை... காதலோடு பெணகள் பார்த்தார்கள் சிலர் தோளைக கண்டாாகள். சிலர் கைகளையே பார்த்துக கொண்டு இருந்தாாகள். சிலர் பாதங்களைப் பார்த்து கொண்டே பிற உறுப்புகளைப் பார்க்காமல இருந்தார்கள். இவ்வாறு இராமனின முழு உருவத்தையும் பார்த்து இரசித்தவர்கள் ஒருவரும் இலலை. இவர்களின் நிலையை கம்பர் ஒரு படி மேலே சென்று "சமய வாதிகள் தனித்தனி முறைகளில் பரம்பொருளை வழிபடுவார்கள். அவர்களைப் போல் இந்தப் பெண்கள் இருந்தார்கள்" எனப்பெண்களின் நிலையைக் கூறுகிறார். "தோள் கண்டார் தோளே கண்டார் தொடுகழல் கமலம் அன்ன, தாள்கண்டார் தாளே கண்டார் தடககைக் கண்டாரும் அஃதே, வாள் கொணட கணணால் யாரே வடிவினை முடியக் கண்டார் ஊழ்கொணட சமயத்து அன்னான் உருவு கண்டாரை ஒத்தார்" என்று சிறக்கப் பாடியுள்ளார்.

**கம்பனின் பொது அறிவு :**

கம்பர் சனக மன்னனின் அரண் மனையில் உளள மன்னர்களையும் அவர்களுடைய நாட்டையும் சிறப்பித்துப் பாடியுள்ளார். மேலும் அவர் களில் துருக்கி நாட்டுக்காரர்களும் இருந்தார்கள் என்று பாடியுள்ளார். இதனால் சனக மன்னன் துருக்கி நாட்டோடு உறவு கொண்டு இருந்ததை நாம் நன்கு உணரலாம்.

மேலும் துருக்கி நாட்டு துலுக்கர்கள் விலைக்கு தந்த குதிரைகள் தசரத மன்னனின் சேனையை அலங்கரித்தன என்று பாடி உள்ளார். இதனால் தசரத மன்னனும் துருக்கி நாட்டு மன்னர்களுடன் வாணிக உறவு கொண்டு இருந்தது புலப்படுகிறது.

சூரிய சந்திரகாந்தக் கற்கள் :

சூரியனின் வெப்பமான அக்னித் தன்மையை எடுத்துக் கொண்டு சக்தியை வெளியிடும் கற்களுக்குக் சூரிய காந்தக் கற்கள் என்று பெயர்.

சந்திரனில் இருந்து குளிர்ந்த தன்மையை பெற்றுக் கொண்டு குளிர்ந்த நீரை வெளிவிடும் கற்கள் சந்திர காந்தக் கற்கள் என்று அழைக்கப் படும்.

கம்பர் இதைத் தம் கவிதைகளினுள் நுழைத்துப் பாடி நம்மை வியப்பில் ஆழ்த்தி, அவரின் அறிவியல் சிந்தனையை நிலை நிறுத்தி உள்ளார். சந்திரகாந்தக் கற்கள் பற்றி கம்பர் பால காண்டத்தில்,

சந்திர காந்தத்தின் தலத்த சந்தனப்
பந்தி செய் தூணின் மேல் பவளப்
போதிகைச்

என்ற அடிகளில் கூறுகிறார். இதில் தூண்களில் ஒளி வீசும் சந்திரகாந்தக் கற்கள் பொருத்தப்பட்டிருந்தன எனக் கூறுகிறார்.

மேலும் அவர்,

வானவர் மகளிர் கால் வருட மாமதி
ஆனனம் கண்ட மண்டபத்துள்
ஆய்கதிர்க்
கால்லுரு காந்தம்

இதில் பெண்டிரின் முகம் சந்திர காந்தக் கற்களுக்கு உவமையாகக்கூறுவதைக் கண்டு இன்புறலாம்.

சூரிய காந்தக் கற்கள் :

"மஞ்சு அலறு ஒளியேனும் இம்
மாநகர் வந்தான்
அஞ்சலன் எனவெறுகண் அரக்கன்
.........
சஞ்சலமும் மலர்வற்றன காந்தின
காந்தம்

என்று சூரிய காந்தத்தின் தன்மையை எடுத்துக் கூறுகிறார். சூரிய காந்தத்தைப் போல் வெம்மையை அரக்கர்கள் வெளியிட்டார்கள் என்று அதன் தன்மையைக் குறிப்பிடுகிறார்.

கம்பரின் தீர்க்க தரிசனம் :

கம்பராமாயணத்தின் முதுகெலும்பாக இருக்கும் முக்கியமான இடம் எது என்றால் இராமன் இலக்குவனின் மனைவியான ஊர்மிளையிடம் தான் எடுத்த அவதார நோக்கத்தை எடுத்துக் கூறுவது ஆகும். வேறு எந்த இடத்திலும் கம்பர் இந்த அவதார நோக்கத்தைக் குறித்துப் பாடவில்லை.

சீதை தன் தந்தை வீட்டில் அளித்த பொன் மற்றும் நவரத்தினம் பதித்த ஆபரணங்களை அணிந்து கொண்டு மகிழ்ந்தாள். உடன் அவள் அந்த ஆபரணங்களை எல்லாம் தன் தங்கையான ஊர்மிளைக்கு அணிவித்து விட்டாள். காரணம் தன் கணவன் இராமனின் கால் தூசு கல்லின்மீது பட்டே அந்த கல் பெண்ணாக மாறியதே. எனவே அவன் கைப் பட்டால் ஆபரணங்களும் பெண்களாக மாறி விடும் என்னும் அச்சத்தால்தான் தன் ஆபரணங்கள் அனைத்தையும் ஊர்மிளைக்கு அணிவித்து விட்டாள். அவளும் மகிழ்வுடன் தன் கணவனைக் காணச் சென்றாள்.

இலக்குவன் தன் மனைவியை தவிர மற்ற பெண்களை ஏறெடுத்தும் பாராதவன். அவன் தன் மனைவி வரும் போது அவள் கால்களில் அணிந்து இருந்த மெட்டியைப் பார்த்து தன் அண்ணிதான் வருகிறார்கள் என எண்ணி அவள் கால்களில் விழுந்து வணங்கினான். இதைக் கண்ட ஊர்மிளை திகைத்தாள். பின் தன் மனைவி என்று உணர்ந்தஇலக்குவன் அவளைத்தன் அண்ணிக்குசமமாக மதித்து விட்டதால் அவளுடன் வாழ மறுக்கிறான். அவளைப் பிறந்த வீட்டிற்கு அனுப்ப ஏற்பாடு செய்கிறான். ஊர்மிளை உடன் இராமனை வந்தடைந்து புலம்பி அழுகிறாள்.

அப்போது கருணைக் கடலாகிய இராமன் தன் அவதார நோக்கத்தையும் இலக்குவனின் மாண்பையும், ஊர்மிளைக்கு எடுத்துச் சொல்கிறான். இராவண யுத்தத்தில் 14 வருடம பிரம்மச்சரிய விரதம் அனுஷ்டித்தவன்தான் இந்திரசித்தை கொல்ல முடியும் என்றும் அவளுக்குத் தெளிவாக்குகிறான்.

இந்த ஒரு இடத்தில் மட்டும் தான் இராமாயணத்தின் நோக்கமும் இராமனின் அவதார பெருமையையும் கம்பர் எடுத்துக் காட்டுகிறார். இதுவே கம்பரின் தீர்க்க தரிசனம் ஆகும்.

கம்பராமாயணத்தின் சிறப்பு :

கம்பராமாயணத்தின் கருத்துக்களும் அதன் உண்மை நெறிகளும் பல நூல்களில் பல புலவர்கள் எடுத்துக் கையாண்டு உள்ளார்கள். உதாரணமாக சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகள் கம்பராமாயணத்தின்பலபகுதிகளைக்கையாண்டு தம் காவியத்துக்குச் சிறப்பு சேர்க்கிறார்.

"அருந்திறல் பிரிந்த அயோத்தி போல்
பெரும்பெயர் மூதூர் பெரும்
பேதுற்றதும"

என்றும்,

"மூவுலகு வீரடியான் முறை நிரம்பா
வகைமுடியத்
தாவியசே வடி சேப்பத் தம்பியொடுங்
காண் போந்து
சோவரனும் போர்மடியத் தொல்
லிலங்கை கட்டழித்த
சேவகண் சீர் கேளாத செவியென்ன
செவியே"

(39-ம் பக்கம் பார்க்க)

# விஞ்ஞானமும் மெய்ஞ்ஞானமும்

அன்று முதல இன்று வரை மேல் நாடுகளில் நிகழ்ந்துள்ள விஞ்ஞான சாதனைகள் மனிதனின் வாழ்க்கை முறையையே பெரிதும் மாற்றி இருக்கின்றன. மனிதனுக்குப் பதிலாக எதையும செய்யக்கூடிய இயந்திரங்களை (ரோபாட்) மனிதன் கண்டு பிடித்து விட்டான். அதி நவீன கம்ப்யூட்டர்கள் நம்மைச் சுற்றி ஆட்சி செய்து கொணடிருப்பதைப் பார்க்கின்றோம்.

ஆனால் மேல் நாட்டு விஞ்ஞானிகளும், மக்களும் இன்று மன அமைதிக்காக மெய்ஞ்ஞானத்தை நாடி வருகின்றனர். சில நூற்றாண்டுகளுக்கு முன் கண்டுபிடித்த விஞ்ஞான சாதனங்கள் அவர்களுக்கு நிம்மதியைத் தரவில்லை. பல்லாயிரம் ஆண்டுகளுக்குமுன் இந்து மதம் பேணிக் காத்து வந்த வேத, உபநிடத சாரங்களில் கிடைக்கும் உண்மையைக் கண்டு தெளிந்து அமைதியைத் தேடி வருகிறார்கள். இதனை ஜான் ஹக்ஸ்லி எனும் அறிஞர் 'நம்மைச் சுற்றி உள்ளவற்றை யெல்லாம் ஆராய்ந்துவிட்டோம். ஆனால் நம்மையே நாம் புரிந்து கொள்ளவில்லை. ஆதனால்தான் நமக்கு அமைதி கிடைக்கவில்லை' என்று கூறுகிறார்.


திரு. கு. சுகுமாரன் எம் ஏ.,
திருவாரூர்.


விஞ்ஞானத்தின் மூலம் பல புதுமைகளைக கண்டு பிடித்திருக்கிறார்கள். ஆனால தொட்டும், கேட்டும், பார்த்தும், சுவைத்தும் உணரக்கூடிய பொருள்களைப் புரிந்து கொள்ள வைப்பது மனம். அதை இயக்குவது யார்? அதன் சக்தியும், தத்துவமும் என்ன? என்ற இந்த ஆராய்ச்சியில் தான் இன்றைய விஞ்ஞானிகள் ஈடுபடத் துவங்கியுள்ளனர். விஞ்ஞானம் இயற்கையை ஆராய்கிறது. மெய்ஞ்ஞானமோ மனிதனை ஆராய்கிறது. பெட்ரண்ர்ட் ரஸ்ஸல் தனது கட்டுரை ஒன்றில் இயந்திர சக்தி மனிதனை அழிக்கும் சக்தி என்றும், ஆன்மிக சக்தியோ மனஅமைதியை அளிக்கும சக்தி என்றும இரண்டாவது உலகப் போரின் முடிவில் தெரிவித்துள்ளார்.

எந்தக் கண்டுபிடிப்பும், பொருளும் நிரந்தரமானது அல்ல என்பதே இன்றைய விஞ்ஞானிகளின் தத்துவம். தரைவழி, வானவழி, கடல் வழி, விண்வெளி இப்படி ஒன்றையடுத்த ஒன்றாகக் கண்டுபிடிப்புகள் தொடர்கின்றன. நம் மெய்ஞ்ஞானம் இதையே ஜகத்மித்யை (உலகம் பொய்) பிரமம் சத்தியம் (கடவுளே உண்மை) என்று இரத்தினச் சுருக்கமாகத் தெளிவாக்கி உள்ளது.

பரம்பொருளிடம் காணப்படும் ஆக்கல், காத்தல், அழித்தல் என்று மூன்று வித சக்திகளும் பரம்பொருளினிடத்து வந்த மனிதனிடம் காணப்படுகிறது. கடவுள் எல்லோருள்ளும் மறைந்து இருக்கிறார் என்ற தத்துவம் இதனால் புலப்படுகிறது.

நாம் மூடப்பழக்க வழக்கங்கள் என்று நினைத்துக் கொண்டிருக்கும் எவ்வளவோ விஷயங்கள், விஞ்ஞான சம்பந்தம் உள்ளதாகக்கண்டுபிடிக்கப் பட்டிருக்கிறது. அமெரிக்காவில் மோட்டார் கம்பெனி ஒன்றில் உற்பத்தி செய்யப்பட்ட எஃகு பொருட்கள் துருப்பிடித்தும், கரும்புள்ளிகளுடனும் காணப்பட்டன. பெண்கள் மாதவிடாய் காலத்தில் சுற்றுப் புறச் சூழல், அமில அடிப்படை காரணமாக பாதிக்கப்படுவதாகவும் அதனால்தான் எஃகு சாமான்கள் துருப்பிடிக்கின்றன என்றும் அந்த கம்பெனி பரிசோதனையின்போது கண்டுபிடித்துள்ளது. அதனால் தான் பெணகள் மாதவிடாய்க்காலங்களில்தனிமைப்படுத்தப்பட்டனரோ?

சுச்ருதர் என்ற நமது ஆதிகால ஞானி இரண சிகிச்சை செய்வதறகு கட்டெறும்புகளைப் பயன்படுத்தியதாக 'ராயல் காலேஜ் ஆப் சர்ஜன்ஸ்' என்ற மலர் தெரியப்படுத்துகிறது. அரச மரத்துடன் இணைந்த வேப்ப மரத்தை நம் முனனோர்கள் பிள்ளைப் பேறுக்காக வலம் வரும் பழக்கம் இருந்து வந்தது. தற்கால விஞ்ஞானம் அதற்கு ஒரு அற்புதமான மருத்துவ விளக்கத்தை அளித்துள்ளது நமக்கு பெரு வியப்பைத் தருகிறது. அரசும் வேம்பும் இணைந்து வீசும் காற்றில் வைட்டமின் 'சி' இருப்பதாகவும், அது பிள்ளைப் பேற்றிற்கு அவசியமான ஹார்மோன்கள் வளர்ச்சி அடையத் தூண்டுவதாகவும் இன்றைய விஞ்ஞானிகள் குறிப்பிடுகின்றனர். விஞ்ஞானிகள் மதக் கொள்கைகளுக்கு எதிரானவர்கள் அல்ல என்பதை இக்கருத்துக்களின்மூலம் அறிந்து கொள்ள முடிகிறது.

உடல் தததுவத்தை விஞ்ஞானம் நன்கு அலசி ஆராய்ந்து இருக்கிறது. பல வகையான நோய்களையும் குணப்படுத்துகிறது. ஆனால் மனிதனின் 'உள்ள உணர்ச்சிகள்' மட்டும் அதனால் கட்டுப்படுத்தவே முடியவில்லை. அதற்கு ஒரே வழி மெய்ஞ்ஞானமே. நம் முன்னோர்களின் விஞ்ஞானப் பார்வைகூட மெய்ஞ்ஞானத்திற்கு உறுதுணை புரியவே ஏற்படுத்தப்பட்டிருக்கின்றது.

காலமும் (Time) இடமும் (Space) ஒன்றுக்கொன்று இணையான தொடர்பு உள்ளவை. ஒரு பொருளுக்கும், இன்னொரு பொருளுக்கும் இடையே உள்ள வித்தியாசம் எதுவுமே முடிவானது அல்ல. இவை

ஐன்ஸ்டினின் அறிவியல் கொள்கை கள். இதைப் புரிநது கொண்டோ மானால் புழு முதல் மனிதன் வரை எல்லாமே ஒன்றுதான் என்பது தெரி யும.

எந்தப் பொருளுக்கும் நியதி என் பது ஒன்று உணடு. ஒவ்வொரு செய லும் அதற்குரிய விளைவை ஏற் படுத்துகிறது என்று விஞ்ஞான தத்து வத்தையே நமது மதத்தில் 'கர்ம பலன்' (Law of Karma) பற்றிக் குறிப்பிடுகிறது.

பிரார்த்தனைஎன்பது நமது மதத் தில் முக்கிய பங்கு வகிக்கிறது. பிரார்த்தனையின பயனாக செயற் கரிய செயல்களைச்சாதித்துவிட முடி யும். நவீன விஞ்ஞானம் பிரார்த் தனையின் மூலம் பயிர்ச்செடிகளின் வளர்ச்சியைக்கூட அதிகரிகக முடி யும் என்று நிரூபிக்கிறது.

பிரகதாரண்ய உபநிஷத்தில், வேதத்தைப் பற்றி குறிப்பிடுகையில் "யஸ்ய நிவஸ்ஸிதம் வேதா:யோ வேதேப்ய: அகிலம் ஜந்து' என்று உள்ளது. இதன் பொருள் என்ன வெனில் ரிக், யஜுர், சாம, அதர்வண வேதங்கள் ஈசுவரனின மூச்சுக் காற் றாக உள்ளது. பிரமமா அந்த வேத ஒலிகளை (மூச்சுக் காற்று) அடிப் படையாகக்கொண்டே புது உலகைப் படைக்க ஆரம்பித்தார். இதன் அடிப்படையில், உலகம் ஒலியின் காரணமாக ஏற்பட்டது என்பதை நம சாஸ்திரங்கள் கூறுகின்றன என் பது தெளிவு. பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்னரே கூறப்பட்ட இத்தத்துவம் இன்றைய அறிவிய லோடு ஐன்ஸ்டினின் கொள்கையோடு ஒத்துப் போகிறது. ஐனஸ்டின தமது அணுககொள்கையில் 'எல்லாப் பொருள்களும் அணுவுக்குள் புகுந்து பார்த்தால் ஒனறாகக் காணப்படு கிறது. ஏன் இப்படி வெவ்வேறு பொருள்களாகத் தெரிகிறது என் றால், ஒரே சக்தியில் ஏற்படும் வெவ் வேறான அதிர்வுகளே' என்று குறிப்

பிடுகிறார். ஒரே சக்தியில் பலவித மான அதிர்வுகள் ஏற்படுவதால் உலகம் உண்டாயிற்று என்று சொல்கிற விஞ்ஞானக் கருத்தும் பரமாத்மாவின் மூச்சுக் காற்றான வேத ஒலியிலிருந்து உலகம் வந்தது என்பதும் ஒன்றாகவே பொருள்படுகிறது.

நியூட்டன்தான் முதன் முதலில் புவி ஈர்ப்பு விசையைக் கண்டுபிடித்ததாக நாம் அறிகிறோம். ஆனால் மிகப் பழைய காலத்தில் ஏற்பட்ட சூரிய சித்தாந்தம், பூமி விழாமல் இருப்பதற்கு புவி ஈர்ப்பு விசையே காரணம் என்று கூறுகிறது. ஆதிசங்கரரும் புவிஈர்ப்பு விசைப்பற்றி குறிப்பிட்டுள்ளார். ஆர்யபட்டர் பூமி சூரியனைச் சுற்றுவதை 'லாகவ-கௌரவ நியாயம்' என்று விளக்கியிருக்கிறார். சூரியனைத் தான பூமி சுற்றி வருவதாகவும், அதனால்தான் சூரியன் தினமும் கிழக்கே உதித்து மேற்கே மறைவதாகவும் ஒரு தவறான கருத்து இருந்து வந்தது. ஆனால் இந்தக் கருத்து தவறானது என்பதை ரிக்வேதத்தில் உள்ள 'ஐதரேய பிராம்மணத்தில்' சூரியன்உதிப்பதும் இல்லை; அஸ்தமிப்பதும் இல்லை என்று தெளிவாகக் குறிப்பிட்டிருக்கிறது.

எல்லா நட்சத்திர மண்டலங்களுக்குட்பட்ட பரப்பை பிரம்மாண்டம் என்று அழைக்கிறோம். அண்டம என்றால் கோழி முட்டை. கோழி முட்டையின் வடிவமானது ஒரு சரியான அளவு வட்ட வடிவமாக இல்லாமல், நீள் வட்ட வடிவில் உள்ளது இதைத்தான் வான மண்டலத்தில் உள்ள கிரகங்கள நீள் வட்டப்பாதையில் சூரியனைச் சுற்றுகின்றன என்று விஞ்ஞானிகள் கணடுபிடித்திருக்கின்றனர். பூமி கோள வடிவமானது என்பதை நம் முன்னோர்கள் அறிந்திருந்ததால்தான் பூகோளம் என்ற பெயரே ஏற்பட்டிருக்கிறது. இப்படி நம் சாஸ்திரஙகளில் காணபபடும் எல்லா விஷயங்களுமே விஞ்ஞான சம்பந்த முடையவைகளாகத்தான் இருக்கின்றன.

வடக்கே மேருமலை இருப்பதாகவும், அங்குள்ள தேவர்களுக்கு ஒரு வருடம் ஒரு நாளாகிறது என்று எல்லா சாஸ்திரங்களிலும் சொல்லப்பட்டுள்ளன. மேம்போக்காக நோக்கினால் இது பொய் போன்று தெரிகிறது. ஆனால் இதுவும் உண்மையாகத்தான் இருக்க வேண்டும். துருவப் பிரதேசங்களில் தொடர்ந்து ஆறு மாதங்கள் பகலாக இருப்பதாகவும், அடுத்த ஆறு மாதங்கள் தொடர்ந்து இரவாக இருப்பதாகவும் நாம் அறிந்திருக்கின்றோம். ஒரு பகல் ஒரு இரவு கொண்டது ஒரு முழு நாள். அப்படியென்றால் ஆறு மாதம் பகல், ஆறு மாதம் இரவு இரண்டும் சேர்ந்து ஒரு நாள்தானே ஆகிறது.

சூரியனில் கரும்புள்ளிகள் தோன்றியுள்ளதாகவும், இதனால் சூரியனுடைய வெப்பசக்தி குறையும் என்று நாளிதழ்களில் செய்திகள வெளியாகிக் கொண்டிருக்கின்றன. சூரியனுடைய சகதியால்தான் இந்த உலகம் நடைபெறுகின்றது என்ற பட்சத்தில் சூரியன் ஒளி ஒலி குறைய குறைய உலகத்தின் இயக்கமும் ஸதம்பித்துவிடும், உலகமே அழியக்கூடிய அபாயமும் உணடு. இது விஞ்ஞானக் கருத்து. மெய்ஞ்ஞானத்தினபடி பிரம்மாவிற்கு இவ்வளவு ஆயுள் என்று ஒரு கணக்கினைக் குறிப்பிடுகின்றார்கள். அந்த காலக்கெடுவிற்கு பின் உலகம் அழியும் என்பது நம் சாஸ்திரங்களின் கணிப்பு. இப்படி விஞ்ஞானம் உலகத்தின் அழிவைப் பற்றி கூறியுள்ள காலமும் சாஸ்திரங்கள் பிரம்மாவின் ஆயுள் பற்றியும் கூறியுள்ளார்கள்.

விஞ்ஞான முன்னேற்றங்கள் மனிதனுடைய அமைதிக்கு வழிகாட்டாமல் அழிவுக்கும் அச்சத்திற்கும்தான் வழிகாட்டுகின்றன என்பதை உணர்ந்து நம் தர்ம சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ள உண்மைகளை அறிந்து கொள்ள வேண்டும். எவ்வளவு நாம் விஞ்ஞானத்தில் முன்னேறிக் கொண்டிருந்தாலும் அவையெல்லாம் ஆத்ம சாநதிக்கு வழிகாட்ட இயலாது. பிரபஞ்சத்தில் உள்ள பொருள்களை ஆராய்வதுடன் உள்ளுக்குள்ளே 'அந்தர்யாமியாக' உள்ள இறைவனை உணரத்தலைப்படவேண்டும். மருத்துவத்தால் குறிப்பிட்ட காலம் வரை காப்பாற்றப்படும் இந்த உடல் மீண்டும் மீண்டும் பிறந்து துன்பங்களை அடைகிறது. இவ்வாறு பிறநது பிறந்து துன்பங்களை அடைந்து இறப்பதை விட பிறக்காமலே இருக்கும் பேரின்ப நிலையை அடைய நாம் முயற்சி செய்ய வேணடும்.

'பிறவாமை வேண்டும் மீண்டும் பிறப்
புண்டேல உன்னை
மறவாமை வேண்டும்'

எனும் காரைக்கால் அம்மையாரின் கருத்தினை உணர்ந்து இறைவனை இமைப்பொழுதும் மறவாதிருப்போமாக.



# ★ தர்ம தேவன் ★

பாரதமேடையில் நடமாடும் தர்ம தேவன் அவன். அவன் தர்ம சாஸ் திரத்திலும் ராஜநீதியிலும் ஒப்பற்ற தேர்ச்சி பெற்றவன். ஆசையும் கோபமுமற்ற மகாத்மா வென்று உல கில் புகழ்பெற்றவன். 'அவனுக்கு ஒப்பான தர்ம நிஷ்டனும் சிறந்த அறிவு பெற்றவனும் மூவுலகங் களிலும் இல்லை' என்று வியாசரால் போற்றப்பட்டவன். அவன் ஒரு ரிஷி யின் சாபத்தால் பூவுலகில் பிறநதான் அவன் யார்?

ஆசிரமத்துக்கு வெளியே ஒரு நாள் மரத்தடியில் மௌனத்தில் ஆழ்ந் திருந்தார் மாண்டவ்யர் என்ற பெய ருடைய ரிஷி. அரசனுடைய சேவ கர்களால் துரத்தப்பட்ட கொள்ளைக காரர்கள் அந்தப்பக்கம் வந்தார்கள். பதுங்குவதற்காக ஆசிரமத்துக்குள் நுழைந்தார்கள். கொள்ளையடித்த பொருள்களை ஒரு மூலையில் வைத்துவிட்டு மற்றொரு புறம் அவர் கள் ஒளிந்து கொண்டார்கள்.

மௌனமாக உட்கார்ந்து யோக நிலையிலிருந்த மாண்டவ்ய ரிஷியை அரசனுடைய சேனைத் தலைவன் திருடர் கூட்டத்துத் தலைவன் என்று நினைத்தான். ஒளிந்திருந்த திருடர் களையும் களவாடிய பொருள்களை யும் கண்டான். தன் எண்ணத்தை உறுதியாக்கிக் கொண்டான். அரச னிடம் சென்று கையும் களவுமாகக் கள்வனைப் பிடித்துவிட்டதாகச் சொன்னான். திருட்டுக் கூட்டத் திற்குத் தலைவனாக இருந்து கொண்டு ரிஷி வேஷம் போட்டு மக் களைஏமாற்றி வந்திருக்கிறானென்று மிகுந்த கோபம்கொண்டான் அரசன்.

சிற்பக் கலையின் பெருமையை உணர்ந்து பாராட்டும் திறமை மக்க ளுக்கு இன்மையால், பிரசித்தி பெற்ற சிற்பி செதுக்கிய சிலை. ஆற்றோரத் தில் கிடககின்றது துணி துவைக்கும் கல்லாக. ஆரவார அபிஷேகங்கள் விண்முட்ட ஒலி எழுப்புகின்றன போலிக கலைஞர்களின் சிற்பங்களுக் காக.

மாண்டவ்ய ரிஷியின் யோக வலி மையை அரசனால் உணர்ந்துகொள்ள முடியவில்லை. "புல்லால் மூடப் பட்ட பாழுங்கிணற்றுக்குச் சமமான இந்த போலி வேடதாரியை உடனே ஏற்றுங்கள் சூலத்தில்" என்று திர விசாரிக்காமல் தண்டனை கொடுத்து விட்டான.

நிரபராதி தண்டிக்கப்படுவதும் குற்றவாளி விடுவிக்கப்படுவதும் 'விதி' என்ற பெயரால் காலம் போடும் கோலமல்லவா?

சூலத்தால் குத்தி ஏற்றப்பட்ட மாண்டவ்யரோ வெகு காலம் வரை யில் மரணம் அடையவில்லை. யோகத்திலிருந்த பொழுது குத்தப் பட்டமையால் அந்த யோகசக்தி அவ ரது உயிரைக் காப்பாற்றிக் கொண் டிருந்தது. வனத்தில் அங்காங்கே யிருந5 ரிஷிகள் அனைவரும் அவ் விடம் வந்து கூடினார்கள்.

"ஒ மாண்டவ்யரே! இந்த பயங் கரமான துன்பத்தைத் தாங்கள் ஏன் அடைந்தீர்கள்?" என்று கேட் டார்கள்.

"உலகத்தைக் காக்கும் அரசனு டைய ஆணையால் அவனுடைய சேவ கர்கள் இவ்வாறு எனக்குத் தண் டனை கொடுத்துள்ளார்கள்" என்று கூறினார் மாண்டவ்யர்.

"அண்டங் காக்கைகளுக்கு சிம்மா சனம் கிடைத்துவிட்டால் துன்பங் கள் அநுபவிப்பது கருடன்தானே?"

சூலத்தில் ஏற்றப்பட்ட ரிஷி உயி ருடன் இருக்கிறாரென்றும் அவரைச் சுற்றி வனத்திலிருக்கும் மற்ற ரிஷி கள் கூடியுள்ளார்கள் என்றும் அரச னுக்குச் செய்தி எட்டியது.

வியப்பும் திகிலும் அடைந்தான் அரசன. உடனே வனத்துக்குப் போனான் பரிவாரத்தோடு. ரிஷி யின் நிலையைப் பார்த்தான் ஆச்சர் யத்தோடு. சூலத்திலிருநது இறக்கி விட உத்திரவிட்டான். அவர் காலில் விழுந்து வணங்கினான். அறியா மையால தான் செய்த குறறத்திற் காக மன்னிப்புக் கேட்டான்.

அரசன் மீது கோபிக்கவில்லை மாண்டவ்யர். நேராகத் தருமதேவ னிடம் சென்றார். தனக்கு ஏற்பட்ட தண்டனைக்குக் காரணம் கேட்டார். "நீர் குழந்தையாக இருந்தபொழுது பக்ஷிகளையும் வண்டுகளையும் இம் சித்தீர். சொற்பமாயிருந்தாலும் தானம் மிகுந்த நற்பயனை அளிக்கும்.

---

**ஸ்ரீவில்லிபுத்தூர் ஏ. ஸ்ரீராமுலு தேசிகன், புதுச்செந்நெல்குளம்.**

---

சொற்மமாய் இருந்தாலும் பாவம் மிகுந்ததீயபயனை அளிக்கும் என்பது உமக்குத் தெரியும் அல்லவா?!" என்று பதில் சொன்னான் தர்மதேவன்.

'சிறு பையனாகவிருந்த பொழுது அறியாமையால் செய்த குற்றத்திற் காக உம்மால் இன்று எனக்கு பெரிய தண்டனை வழங்கப்பட்டது. அதற்காக நீ பூலோகத்தில் மனிதனா கப்பிறப்பாய்' என்று தர்மதேவனை சபித்தார் மாண்டவ்ய ரிஷி.

அந்த ரிஷியின் சாபத்தைப் பெற்று பூலோகத்தில் பிறந்த தர்மதேவன் தான் விதுரன் ஆவான்.

(36-ஆம் பக்கம் பார்க்க)



# புனித பூமி காலடி



எழில் வளம் கொழிக்கும் கேரள ராஜ்யம். அந்த ராஜ்யத்திலுள்ள ஆலப்புழைக்குச் சிறிது மைல்கள் தொலைவில் உள்ளது "காலடி" கிராமம். காலடி ஓர் அழகான—அமைதியான கிராமம். பெரியோர்கள், மஹான்கள், சரித்திர புருஷர்கள் ஆகியோரின் கால் அடி பட்டு புனிதமடைந்ததால் காலடி என்று பெயர் வரலாயிற்று.

பூர்ணா (பெரியாறு) நதியின் இரு கரைகளையும் ஒட்டி அமைந்துள்ள இந்தக் கிராமம் எழில் கொழிக்கும் சோலைகளையும், வளமான பூமியையும் கொண்டு பார்ப்பதற்கு ஓர் அழகானகிராமமாகத் திகழ்கிறது. இந்துக்களுக்குஓர் புனிதமானஸ்தலம் காலடி. சாக்ஷாத் பரமசிவனே ஸ்ரீ சங்கரராக காலடியில் அவதரித்தவர் என்று சங்கரவிஜயம் கூறுகிறது.

**சங்கரர் அவதாரம்**

பன்னிரண்டு நூற்றாண்டுகளுக்கு முன்பு சிவகுரு—ஆர்யாம்பாள் என்ற நம்பூதிரி தம்பதியினர் காலடியில் வசித்துவந்தனர். அடக்கமே அணிகலனாகவிளங்கிய இத்தம்பதியினருக்கு சகல வசதிகள் இருந்தும், நெடுநாள் புத்திரப் பேறு இல்லாமல் இருந்து வந்தனர். திருச்சூரிலுள்ள வடக்குநாதன் சிவாலயத்திற்குச் சென்று தினந்தோறும் தம்பதிகள் மனமுருக வேண்டிட, ஆண்டவனருளால் காலத்தில் ஒரு புத்திரன் பிறந்தான். அந்தப் புத்திரன்தான் சங்கரர். அவரே ஆதிசங்கரருமாவார்.

**குருகுலவாசம்**

பிரும்மசாரியின் ஒழுக்கப்படி மறைகளை கற்பதற்காகத் தாயைப் பிரிந்து குருகுலவாசம் தொடங்கினான் சிறுவன் சங்கரன். ஏழு பிராயம் முடியும் போதே வேதம், வேதாந்தம், ஸ்மிருதிகள், காவியங்கள் ஆகியவற்றைக் கசடறக் கற்றுத் தேர்ச்சி பெற்று விட்டான். ஆசிரமநியமனங்களை வழுவாது காத்து வந்தான். மாடமாளிகையை நீத்து, அருமை அன்னையை நீத்து ஆசிரியர்களுடனேயே இருந்து பணிவிடை செய்தான். வீடுவீடாகச் சென்று உஞ்சவிருத்தி எடுத்து, அதைத் தம் குரு பத்தினியிடம் கொடுத்து, அந்த அம்மையார் தரும் பிரசாதமாக அதைப் பெற்றுக்கொண்டான்.

துறவு உணர்வு ஒன்றே சங்கரனின் மனதில் ஆழப்பதிந்தது. இளம் பாலகன் சங்கரனின் உள்ளத்திலே கனிந்தெழுந்த பாமாலைதான் திருமகள் ஸ்துதியான "கனகதாரா ஸ்தோத்ரம்". பதினாறு வயதிற்குள் உபநிஷத்துக்கள், பிரம்ம சூத்திரங்கள் முதல் விஷ்ணுசகஸ்ரநாமம் வரை பலவற்றிற்கு பாஷ்யங்களையும் பலப்பல ஸ்தோத்திரங்களையும் இயற்றிவிட்டார் சங்கரர்.

---

**சன்மிஷ்டை**

---

**சந்நியாசம் பெறுதல்**

ஒருநாள் காலை ஒரு அதிசய சம்பவம் நிகழ்ந்தது. தன்னுடைய தாயாருடன் சங்கரர் ஆற்றிற்குக் குளிக்கச் சென்றார். ஆற்றில்குளிக்க இறங்கியதும், ஒரு முதலை அவருடைய காலைக் கவ்வியது. தண்ணீருக்குள் இழுத்துச்செல்ல முயன்றது. சங்கரர் தன் தாயாரைப் பார்த்து உரக்கக் கூவினார்.

தாயாருக்கோ என்ன செய்வதென்று தெரியவில்லை. தான் பெற்றெடுத்த மகனை தன் கண்ணுக்கு எதிரிலேயே முதலையிடம் பலியிட எந்தத்தாய் துணிவாள். கோவெனக் கதறியழுத தன் தாயாரிடம், முதலையின் பிடியிலிருந்து தன்னை விடுவிக்க வேண்டுமானால், தனக்கு சந்



காலடி ஆதிசங்கார் கோயில்



ஸ்ரீ காளஹஸ்தீஸ்வரர் கோயில் - திண்டுக்கல்
திரு. எம். ராஜகோபாலன் - சென்னை.

தியாசம் வாங்கிக் கொள்ள அனுமதிப்பதுதான் ஒரே வழி என்றும், வேறு வழி கிடையாது என்றும் சங்கரர் கூறினார்.

வேறு வழி இல்லாமல் முதலையின் பிடியிலிருந்து தன்னுடைய மகன் தப்பினால் போதுமென்ற எண்ணத்தில் தன் மகனைச் சந்நியாசம் வாங்கிக்கொள்ள அனுமதித்தாள் அந்தத் தாயார். சந்நியாசம் வாங்கிக் கொள்ளுமுன் தன்னுடைய தாயாரின் கடைசி காலத்தில், தான் எங்கிருந்தாலும் திரும்பி வந்து அவருடன் கூட இருப்பதாயும், ஈமச்சடங்குகளையும் தானே செய்வதாகவும் தாயாரிடம் உறுதியளித்து விட்டுத்தான் சங்கரர் சந்நியாசம் பெற்றுக கொண்டார். அதேபோல, பிற காலத்தில் தாயார் ஆர்யாமபாளின் உடலையும் தகனம் செய்தார்.

பாத யாத்திரையும் ஆன்மீகப்பிரசாரமும

சந்நியாசம் பெறவேண்டி வடககே நர்மதா நதி தீரத்தில் ஒரு குகையில் வசித்து வந்த மகான் ஸ்ரீ கோவிந்த பகவத் பாதரிடம் சென்று கிரமப்படி சந்நியாச தீட்சை பெற்றார் சங்கரர். அந்த மகான் "அத்வைதம்" என்ற ருக்கு அளித்தார். அத்வைதம் வேதத்திலும், உபநிஷத்திலும், பிரம்மசூத்திரத்திலும், கீதையிலும் சொல்லப்பட்டிருககும் தத்துவமேயாகும். புராண இதிகாசங்களும் அத்வைதம் பற்றி நிறைய சொல்லியிருக்கின்றன.

காலடியில் அவதரிந்த ஸ்ரீ சங்கரர் பூத உடலில் நடமாடிய காலம் முப்பத்திரண்டு ஆணடுகளே! பதினாறு வயதிற்குள் தீட்சை பெற்ற சங்கரர் தன்னுடைய மீதி பதினாறு ஆண்டுகள் தம் சிஷ்யர்களுடன குமரி முதல் இமயம் வரை பாதயாத்திரை செய்து அத்வைத வித்யோபதேசம் செய்து வந்தார். கர்ம மார்க்கத்தின் அவசியத்தை அறிவுறுத்திய ஸ்ரீ சங்கரர் ஞான மார்க்கத்தின் இறுதி நிலையாகிய அத்வைத சித்தாந்தத்தை ஸ்தாபித்து பிரம்ம வித்தையை விளக்கியுள்ளார்.

"உலகமே ஒரு மாயை. அது ஒரு பொய்யான தோற்றமும் கூட. பிரம்மமே நித்யம். ஸ்திரத்தன்மை பெற்றது. அது ஸத்யமும் கூட! ஜீவனே பிரம்மம். அது வேறல்ல"; இதுவே அத்வைத சித்தாந்தத்தின ஸாரம். தார்மீக நெறியையும், ஆன்மீகத்தையும் வழுவாது கடைப்பிடிக்கவும், ஹிந்து மதத்தின் கோட்பாடுகளில் இருந்து வழுவாதிருக்கவும், அதன் பாரம்பரியங்களைப்பேணிக்காக்கவும் அவர் தமது பாதயாத்திரையினை மேற்கொண்டார்.

காஞ்சியில் ஜோதியில கலநதார்

தமிழகத்திலுள்ள எல்லாத் திருத்தலஙகளுக்கும் சென்று வழிபட்டார் சங்கரர். வைகாசி மாதம் சுக்ல பக்ஷம், ஏகாதசி தினம் சங்கரர் காஞ்சி காமாக்ஷியம்மனின் சந்நிதியையடைந்தார். மக்களின் கடமையைப் பற்றி இரத்தினச்சுருக்கமாக "உபதேச பஞ்சகம்" என்ற ஐந்து ஸ்லோகங்களில் எடுத்துரைத்தார்.

தால் சங்கரனின திருமேனியும் மெல்ல மெல்லக் கரையலாயிற்று. சங்கரர் ஜோதியும் அன்னை காமாக்ஷியின் வடிவத்தில் இரண்டறக் கலந்து ஐக்கியமாயிற்று. வாழ்நாள் முழுவதும் அத்வைதம் போதித்த மஹானின் வாழ்வு முற்றுப்பெற்றது.

### நேருவின் புகழாரம்

காலஞ்சென்ற நமது பிரதமமந்திரி பண்டித நேரு ஆதிசங்கரைப்பற்றி ஒரு சமயம் குறிப்பிடுகையில் "இமயம் முதல் குமரிமுனை வரை இந்தியா முழுவதையும் தமது ஆன்மீகத் துறைக்கு நடவடிக்கைக் களமாகக் கருதி, இன்று வரையில் துல்லியமாக தெளிவாகத் தெரிகின்ற அளவுக்கு தனது சக்தி மிக்க மனத்தினாலும், வளமான ஆளுடைமையினாலும் அழுத்தமான முத்திரையைப் பதித்துச் சென்றுவிட்டார். தென் இந்தியாவின் கோடியிலுள்ள இந்தச் சிறிய கிராமத்தில் பிறந்த புண்ணியர் என்று காலடிக்குச் செல்லுகின்ற அனைவரும் வியப்படைகிறார்கள்" என்று கூறியிருக்கிறார்.

### புனித பூமி காலடி

இன்று நாம் காணும் காலடி, மகான் ஆதிசங்கரரின ஒரு புனித ஞாபகார்த்த ஸ்தலமாகக் காட்சியளிக்கிறது. இந்துக்களுக்குக் காலடி ஒரு புண்ணிய க்ஷேத்திரமாகும்' சிருங்கேரி ஸ்ரீசாரதா பீடததின் ஆதி சங்கரரின் அவதாரததின் 33-வது குருவான ஸ்ரீநரசிம்ஹ பாரதி சுவாமிகள் இந்தநூற்றாண்டின் ஆரம்பத்தின ஆதிசங்கரர் அவதரித்த புண்ணிய பூமியான காலடியின் முக்கியத்துவத்தைஉணர்ந்து, அதை உலகுக்குப் பறைசாற்ற ஆதிசங்கரர், ஸ்ரீசாரதாம்பிகை விக்ரஹங்கள் பிரதிஷ்டை செய்த பெருமை அவரையே சாரும்.



ஸ்ரீவிவேகானந்தர் நினைவு மண்டபம்

எம். ராஜ்யலட்சுமி

ஆதிசங்கரரின் தாயார் ஆர்யாம்பிகை இங்குதான் தகனம் செய்யப் பட்டார். அதே இடத்தில்தான் ஆதிசங்கரரின சிலையும் பிரதிஷ்டை செய்யப்பட்டது. இரண்டு ஆலயங்கள் நிர்மாணிக்கப்பட்டு நடுவில் ஆர்யாம்பிகையின் சமாதி உள்ளது. மேற்கே, ஆர்யாம்பிகையின் இஷ்ட தெய்வமான ஸ்ரீ கிருஷ்ணன ஆலயமும், வினாயகர் ஆலயமும் உள்ளன.

### சங்கரர் ஞாபகார்த்த டிரஸ்ட்

ஆதிசங்கரரின் ஞாபகார்த்தமாக நிறுவப்பட்ட இந்த அறநிலையம் (டிரஸ்ட்) பல முககிய பணிகளை மேற்கொணடிருககிறது. கல்வி, இலக்கியம, கலாசாரம் ஆகிய பல்வேறு துறைகளிலும் ஆன்மீக நடவடிககைகளிலும் காலடியில் ஒரு புனிதமான சேவை செய்து வருகிறது.

ஒவ்வொரு வருஷமும் காலடியில் மே மாத முதல் வாரம் "சங்கர ஜயந்தி"யின் விழா கொண்டாடப் படுகிறது. ஆயிரக்கணக்கில் பக்தர்கள் இந்த விழாவில், இந்தியாவின் பல பாகங்களில் இருந்தும் வந்து கலந்து கொள்கின்றனர். விசேஷ பூஜைகள், ஹோமங்கள் அபிஷேகங்கள் முதலியவை பிரபல வேத விற்பன்னர்களின் வேத கோஷங்களுக்கிடையே நடைபெறுவன ஒரு கண் கொள்ளாக் காட்சியாகும்.

"எண்ணம், வாக்கு, செயல் ஆகியவற்றால் ஒவ்வொரு மனிதனையும் பரிசுத்தமாக்கும் ஒரு ஆதர்ச ஸ்தலமாகும் பூர்ணா நதிக்கரையிலுள்ள காலடி" என்று சிருங்கேரி, துவாரகா, பூரி சங்கராச்சார்ய ஸ்வாமிகள் ஒருசமயம் ஒரு கூட்டறிக்கையில் தெரிவித்துள்ளனர். ஒவ்வொரு மனிதனும் ஆதிசங்கரரின் அவதார ஸ்தலமாகிய காலடிக்கு விஜயம் செய்வது தங்கள் வாழ்நாளில் மேற்கொள்ளும் ஒரு புனித கடமையாகும்.



# பிரபன்னனின் பிரலாபம் ★

திரு. எல். பி. சம்பத்,
சென்னை-44

கவிச்சக்கரவர்த்தி கம்பன் தான் இயற்றிய இராமாவதார காவியத்தில் இராவணன் வதைப்படலத்தில், ஸ்ரீ இரகுகுலத்திலகனைக் கொல்லும்படி இராவணன் விட்டெறிந்த சூலாயுதத்தைக் கண்டு, வானவர்களும் முனிவர்களும் "இந்த ஆயுதம் கொல்லும் வன்மை பெற்றது, இனி சீதாபதியைக் காணப்போகிறதேயில்லை!" என்று அலறி அழுது மனத்தாங்கல் கொண்டு சொல்லொண்ணாத் துயரமுற்று ஏங்கி நிற்கையில், சக்ரவர்த்தி திருமகன் பிரயோகித்த எல்லாவித அத்திர சத்திரங்களையும் பிளந்துகொண்டு இராமபத்திரன் அருகாமையில் நெருங்கும் தருவாயில், அது அவருடைய உங்காரத்தால் துகள் துகளாகும் பொழுது தசமுகன் ஏதுமறியாமல் ஆச்சரியத்துடன் பின்வருமாறு சொல்லலுற்றான்: "இந்த இராமன் எனது பத்துத் தலைகளையும் இருபது கைகளையும் கொய்து அக்னியிலிட்டு எரியப்பண்ணி உதிரத்தை ஆகுதியாகச் சொரிந்து, அழியாத வரங்களை பிரம்ம ருத்ராதியர்களிடமிருந்து நான் பெற்றிருந்தும் அவற்றைப் பொருட்படுத்தாமல் எளிதில் அழிக்கின்றானே. எவ்விதப படைக்கலன்களையும் படுதூளாக்குகின்றானே; இவன் யாராக இருக்கும்!"

சிவனோ வல்லன் நான்முகனல்லன் திருமாலாம்
அவனோ வல்லன் மெய் வரமெல்லா மடுகின்றான்
தவனோ வென்னில் செய்துமுடிக்கும் தரனல்லன
இவனோ தானவ் வேதமுதற் காரண மாவான"

'சிவபிரானோ இவன்! ஆனால் மான், மழு நான்கு புஜம், நீலகண்டம் முக்கண் இவைகள் இருக்கவேண்டுமே! தவிர ஈசன் தான் கொடுத்த வரத்தை தானே அழிக்க மாட்டானல்லவா! நான்முகனாயிருக்குமானால் அந்த நாமத்திற்கேற்ப நான் முகங்களும் எட்டுக் கண்களும், தண்ட கமண்டலங்களும் இருக்கவேண்டுமே; மேலும் பிரமன் எனககுப் பாட்டனாகவும் புரோகிதனுமாயிருப்பதால் விரோதம் செய்யானே; ஸ்ரீமந் நாராயணனாயிருப்பானாயின், பஞ்சாயததுடனல்லவா காட்சி அளிக்க வேண்டும்' என்று வியந்து தேற்றமுற்று இவர்களுக்கும் மேலான வேதமுதற் காரணமாயுள்ள மூல பிரக்ருதிதான் இவன்' என்று நிச்சயித்தான்.

இதே கருத்தைக் கருவாய்க் கொண்டு கவிச்சக்ரவர்த்தி, இராவணன் சபையில் அநுமன்கூறும் விடையில் புகுத்தியுள்ளான்.

"மூலமும் நடுவும் ஈறும் இலலது ஓர் மும்மைத்து ஆய
காலமுமம, கணக்கும் நீத்த காரணன் கைவில் ஏந்தி
சூலமும் திகிரிசங்கும் கரகமும் துறந்து தொல்லை
ஆலமும் மலருமம வெள்ளிப் பொருப் பும் விட்டு அயோத்தி வந்தான்

வேத பிரதி பாத்யமான மூல பிரக்ருதி படைத்தல், காத்தல், அழித்தல் என்ற மூன்று தன்மையாய் இயங்கி இப்புவியை நடத்தி வருகிறது.

தசக்ரீவன், தாசரதியின் ஒரு வாளிக்கு இரையானான். போர்க்களத்தின் மத்தியில் மண்ணில் விழுந்து மடிந்தான் மாற்றான் மனைவியை மனச்சிறையில் வைத்தவன்.

மாண்டு கிடக்கும் தன் தமையனைக் கண்டு துக்கித்து "தான் ஆடா விட்டாலும் தன் தசை ஆடும்" என்கின்ற உலகு வழக்குககு எடுத்துக் காட்டாக விபீஷணன்,

"போர் மகளைக் கலைமகளைப் புகழ் மகளைத் தழுவியகை பொறாமைகூரச்
சிர்மகளைத் திருமகளைத்தேவர்க்கும் தெரிவரியத் தெய்வக்கற்பின்
பேர் மகளைத் தழுவுவான் உயிர் கொடுத்துப் பழிகொண்ட பித்தா பின்னைப்
பார்மகளைத் தழுவினையோ திசை யானைப் பணையிறுத்த பணைத்த மார்பால்"

என்று பிரபத்தி மார்க்கமாய், சரணாகதவத்ஸலனான ஸ்ரீ ராமச்சந்திர பிரபுவின் திருவடிகளில் அடைக்கலம் அடைந்து தன் ஆன்மா கடைத்தேற வழிவகுத்த விபீஷணன் பிராக்ருத சம்மந்தத்தால், மாண்டு கிடக்கும் தன் தமையனின் உடல் கிடப்பதைப் பார்த்து பிரலாபிப்பதை கவியரசன் வருணிக்கும் அழகே அழகு.

பகைவரோடு எதிர்த்துப் போர் புரிந்து அவர்களை வென்று ஒரு காலத்தில் பெற்ற 'வெற்றி' என்கின்ற பெணணையும், சகலசாஸ்திரங்கள் கற்று சாமவேத கானம் பண்ணி 'கல்வி'யாகியபெண்ணையும், வீரம் செல்வம் முதலானவைகள் காரணமாகப் பெற்ற 'கீர்த்தி'யாகிய பெண்ணையும் நெடுங்காலம் நெருங்கி சுகானுபவத்தைப் பெற்று அனுபவித்து மேலே சொல்லப்பட்ட அப் பெண்மணிகள் தமது நாயகன் இப்பொழுது காமாந்தகனாகிநெறிதவறி மற்றொருவன் மனைவியை அபகரிக்கத் தலைப்பட்டானென்று அழுக்காறு கொள்ளும் படியாகவும்: எல்லாவித செல்வங்களையும் அளிக்கக்கூடிய தனி வன்மை பெற்ற ஸ்ரீமஹாலக்ஷ்மியின் அம்சமானவளும், நான்முகன் முதல் ஏனைய சுரர்கள் வரை அனைவருக்கும் தாயாய் விளங்குபவளும், கற்பு உயிரெடுத்துவந்ததென மகாபதிவிரதை சீதையைத் தழுவும் பொருட்டு துர்புத்தியால் கிடைப்பதற்கு அருமையான உயிரை இழந்து எக்காலத்தும் நீங்காத பெரும் பழியைத் தேடிக்கொண்டாயே மதி மயங்கிய பைத்தியமே! நீ இராம பாணத்திற்கு இலக்காகி தலைவேறு உடல்வேறுபட்டு விழுந்து அதன் விளைவாக வாரணம் பொருத்தமார்பில் ஒடிந்த தந்தங்கள் பரிதி போலப் பிரகாசிக்கின்ற தன்மையில் பூமியாகியப் பெண்ணைத் தழுவிக்கொண்டு கிடக்கின்றனையோ!' என்று பிரலாபித்தார்.

இந்தப் பாசுரத்தின் மூலம் கம்பர் தன் கற்பனாசக்தியையும் கவித் திறனையும் சூழ்நிலைக்கு ஏற்றவாறு சமைத்திருப்பதை என்னென்பது! ௐ

# நறையூர் நின்ற நம்பி

திரு ஆர்- சுப்பாராவ்,
திருக்கோயிலூர்.

ஸ்ரீநாச்சியார் கோயில் என்னும திவ்விய தேசம், கும்பகோணம்—திருவாரூா பேருந்துப பாதையில கும்பகோணத்திலிருந்து பத்துக் கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. திருநறையூர் மணிமாடக கோயில், சீனிவாச க்ஷேத்திரம முதலியப பெயர்களும இதற்கு வழங்கி வருகின்றன.

செம்பியன் கோச்செங்கணானின திருப்பணிகளைக் கொணட மாடக கோயில். மாடக் கோயில் என்பது பல படிகளைக் கொண்ட திருமாளிகை யாகும். பெருமாளிடம சோழ மன்னன் செங்கணான் வெற்றிவாள பெற்ற தலம்.

இங்கு நாச்சியாருக்கு முதல் இடம். தனிச் சுதந்திரம். எனவே ஊரின் பெயரும் நாச்சியார் கோயில் ஆயிற்று. நாச்சியாருக்குத் தனிக் கோயில் இல்லை. ஆண்டாளுக்கு இங்குக் கோயில் இல்லை.

திருமகளுக்குப் பெருமை திருவரங்கத்தில். பூமகளுக்குப் பெருமை திருவில்லிபுத்தூரில். நீளாதேவிக்குப் பெருமை நாச்சியார்கோயிலில் என்று கூறலாம்.

நாச்சியாரின் திருநாமம வஞ்சுள வல்லியாகும். வஞ்சுளம் என்னும் கொடியின கீழ் மேதாவி முனிவரால் கண்டெடுக்கப்பட்டவர். இத்தாயாரின் திருநட்சத்திரம் பங்குனி உத்திரம்.

மூலவர் (பெருமாள்) திருநாமங்கள் சீனிவாசன், திருநறையூர்நம்பி, சுகந்த வனநாதன், வியூக வாசுதேவன் முதலியனவாகும். பெருமாள் "வலங்கை ஆழி இடங்கை சங்கம் உடையார்". கிழக்குத்திசை நோக்கும் திருமுகமண்டலத்துடன் "நறையூர் நின்ற நம்பி"என்று கலியன் (திருமங்கையாழ்வார்) பாடியவாறு நின்ற கோலத்தில் எழுந்தருளியுள்ளார். திருமங்கை யாழ்வாருக்கு பஞ்ச சமஸ்காரம் என்னும ஸ்ரீ வைணவ இலச்சினையை அருளிய அருட் திருக்கோலம் இது. 'நம்பி' என்னும் திருப்பெயரை பெருமாளுக்குச் சூட்டியவர் இந்த ஆழ்வாரே. ஸ்ரீ வைஷ்ணவ சமயத்தில் 'நம்பி' என்னும் சொல் பெரும்பாலும் ஆசார்யாகளையே குறிக்கும்.

மேதாவி முனிவரின் தவப்புதலவி வஞ்சுளவள்ளியை நம்பி கைததலம் பற்றிய திருத்தலம்.

ஆம, மேதாவி முனிவரின் திருமாளிகைக்கு விருந்தினராக வந்திருந்தபோது அங்கு விருந்து உணட பின் நமது திருக்கையில் நீர் வார்த்திட நெருங்கிய வஞ்சுளவல்லியை காதல் வேகத்தில் கைப்பிடித்து இழுத்த பெரும ஆள் இவர். இதை அறிந்ததும் மேதாவி முனிவர் பெருஞ்சினம் கொண்டு பொங்கி எழுந்தார். ஆனால் பெரும்புயல் உருவெடுக்கும் முன்பே விருந்தாளி விழித்துக் கொணடார். நமது திவ்விய மங்கள திருக்கோலத்துடன் மேதாவியார் முன தோன்றி புன்முறுவல் பூத்துநின்றார். புயல் தென்றலாயிற்று மேதாவியாா உண்மை உணர்ந்து உள்ளம் உருகினார். தமது தவப்புதல்வியை திருமாலுக்குத் தாரை வாாத்துக் கொடுத்து திருமணம செய்து வைத்தார்.

கருவறையில் பெருமாளுக்கு மருங்கில் சங்கர்ஷ்ணன், அநிருத்தன், பிரத்யும்னன, புருஷோத்தமன், நான்முகன் ஆகியோர்களும் எழுந்தருளியுள்ளார்கள்.

பட்சிராஜன் கருடன் தனிக் கோயில்கொண்டு இங்குத தனிச்சிறப்புடன் திகழுகிறார். இவர் கற்சிலை வடிவானவர். நீள் சிறகும் நீள் முடியும் நெடிது உயாந்த தோளும் எடுப்பும மிடுக்கும் கொண்ட தோற்றமும் கொணடு அவர் நம் சிந்தை கவர்கிறாா. 'நாச்சியார் கோயில் கருட சேவை' ஜெகம் புகழ் கொணடது. இவருக்கு நாளும ஆறுவேளை பூஜை நடைபெறுகிறது. பெருமாளுக்குத் திருவாராதனம கண்டருளப் பெற்ற அமுதுபடியே இவருக்கும் நிவேதனம் ஆகிறது. கொழுககட்டையில் இவருக்குத் தனிருசி. 'மோதகா மோதர்' எனறு அழைககபபடும் அளவுக்கு அது வளர்ந்துள்ளது.

பண்டு பாற்கடலில் பளளிக் கொண்டிருநத பரமனை விட்டகன்ற திருமகள் மேதாவி முனிவரின் தவப் புதல்வியாக இங்கு வளாந்து வந்தார். திருமகளைத் தேடி திசையெல்லாம் அலைநதபோது கருடன் இங்கு வகுள மரத்தடியில் வஞ்சுளவல்லியைக் கண்டு நெஞ்சம மகிழ்ந்தார். அக் கணமே திருமாலவனுக்குச் செய்தி பறந்தது. திருமால் திருநறையூர் வந்து திருமகளை திருமணம் புரிந்தாா.

பெருமாளின திவ்விய மங்கள ரூபத்தை நாளும் கண்டு களித்திடவும் ஸ்ரீபாதம் தாஙகும் திருத்தொண்டினைத்தொடர்நது புரிநதிடவும் நம்பியிடம வரம்பெறறுகருடன் இங்கேயே நிரந்தரமாக நிலைத்துவிட்டார். அடியார்களின் வினைத்தீர்த்திடும் அருட் தெய்வமாகவும், கலியுக வரதராகவும் அவர் இங்கு விளங்குகின்றார். இவரது திருநட்சத்திரம் சுவாதி.

பெரும் ஆர்வமும் பெருமகிழ்ச்சியும் பொங்கிட பெருமாளை தம்



இசைத் தூண் மண்டபம் — ஹம்பி.

பெருந்தோள்கள் மீது தாங்கியவண்ணம் ஆண்டுக்குஇருமுறை, மார்கழித் திருவிழாவிலும் பங்குனித் திருவிழாவிலும் நான்காம் திருநாள் அன்று இவர் திருவீதி புறப்பாடு எழுநதருளுகிறார். அப்போது ஆரம்ப கட்டத்தில் ஸ்ரீபாதம் தாங்குவோர் நால்வராகவும் வாரைகள் சேர்த்த பின் மூலே ஒன்றுக்கு நால்வராகவும், பின் எண்மராகவும் பின் படிப்படியாக ஸ்ரீபாதம் தாங்குவோர் எண்ணிக்கை பல்கிப் பெருகி பெரும் வியப்பை ஊட்டுகிறது. இந்த அரிய தரிசனம் உள்ளபடியே ஓர் ஆனந்த அனுபவம் ஆகும். நாச்சியார் வெள்ளி அன்னப் பறவைமீது உடன் எழுந்தருளுகிறார்.

கலியன் திருநட்சத்திரம் கார்த்திகை. பெருமானின் சாரங்கம் என்னும் வில்லின் அம்சம். நீலன் என்ற பெயருடன் சோழ மன்னரது சேனைத் தலைவராக இருந்தார். பின்னர் குறுநில மன்னராய் திருமங்கை மன்னன், 'பரகாலன்' போன்ற சிறப்புப் பெயர்களைத் தாங்கித் திகழ்ந்தவர். திருநறையூர் நம்பி என்றால் கலியனுக்கு தீங்கரும்பு, தேன்பலா. திருமங்கை ஆழ்வார் திருமடல் பாசுரம் பெற்ற தனிப்பெருநதலம் இதுவே

கலியன் தனது காளைப் பருவத்தில் குமுதவல்லி என்ற தெய்வ நங்கையை குளக்கரையில் கண்டு காதல் கொண்டார். அவளை மணம் கொள்ள அணுகியபோது அவள் பல நிபநதனைகளை முன்வைத்தாள். கலியன் கலங்கவில்லை. நிபந்தனைகள் அனைத்தையும் நிர்விசாரமாய் ஏற்றார். அதன்படி நாள்தோறும் ஆயிரத்தெட்டு ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு ஓராண்டு காலம் ததியாராதனம் (அமுது அளித்தல்) செய்திட முனைந்தார். அப்போது கலியன் கஜானா காலியாகிவிட்டது. ததியாராதனம் தடைபடும் நிலைமை தோன்றியது. எனவே கலியன் சோழ மன்னனுக்குச் செலுத்த வேண்டிய கப்பத் தொகையில் கை வைத்தார். குட்டு வெளியாயிற்று. கலியன் சிறை புகுந்தார். அன்று சிறை இருந்த இடமே இன்று கலியனுக்குக் கோயில் ஆயிற்று. சிறையில் கொடுமைகள் ஓங்கின. வேறு வழி இல்லை. கலியன் சிறையில் உண்ணா விரதப் போராட்டத்தில் குதித்தார். நாட்கள் ஓடின கலியனுக்கு பெருமாள் கருணை புரிந்தார். (இத்தகையப் போராட்டங்களுக்குக கலியனே முன்னோடி, மூல குரு.)

கலியனின் கனவில் தோன்றி பெருமாள், காஞ்சீபுரம் வேகவதியாற்றில் உள்ளபெரும் புதையலைக்காட்டியருளினார். அப்புதையலைக்கண்டு கலியன் பொற்காசுகளை அள்ளி எடுத்தார். கப்பத்தொகையைக் கட்டி முடிததார். சிறைக்கதவுகள் திறந்தன. ஓராண்டு கால ததியாராதனமும் முடிந்தது.

'காலம் ஒரு நாள் மாறும், நம் கனவுகள் யாவும் கூடும்' இன்ற கலியனின் நம்பிக்கை நன்கு கனிந்தது. குமுதவல்லியை கரம்பிடித்து மணம் முடித்தார். திருநறையூர் நம்பிமீது கலியன் கொண்ட ஈடுபாடு ஓங்கி வளர்ந்திட அதுவும் ஓர் உறுதுணையாயிற்று.





# சித்திரைத் திருவிழா

திரு. கே. எம. பாபுஜி, எம்.ஏ.,
*திருப்பதி*

தமிழன் இயற்கையோடு இயைந்து வாழ்ந்தவன். அவன வாழ்ந்த நிலத்தை இயற்கை அமைப்புக்கு ஏற்ப குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என ஐந்து வகையாகப்பிரித்து அவற்றுக்குஏற்ப தெய்வம்,உணவு, உடை,பழக்க வழக்கங்களே வகுத்துக்கொண்டான். இவ வாறு இயற்கையோடு வாழநதவன மாதங்களைக் கணக்கிடும் போதும் கூட அவன் இயற்கையை முதனமை யாகக் கொண்டு பிரித்தான. இருபத்தேழு நட்சத்திரங்களில் ஒவ்வொரு மாதத்திலும், பௌர்ணமியுடன் எந்த நட்சத்திரம் சேர்கிறதோ அந்த நட்சத்திரங்களின் பெயரை ஒட்டியேதான் மாதங்களின் பெயர்களைப் பிரித்தான். இதன்படி முழு சந்திரனுடன் சித்திரை நட்சத்திரம் சேர்ந்து நிற்கும்மாதமே' சித்திரைமாதம்' எனப்படும்.

சித்திரை மாதம் சித்திரை நட்சத்திரம் கூடிய பௌர்ணமியே 'சித்திரா பௌர்ணமி' ஆகும். சித்திரகுப்த விரதம் நோற்பார்கள் அன்று முழுவதும் உப்பில்லாத உணவுண்டு விரதம் இருப்பார்கள். வழிபாட்டின்போது பொங்கல் இட்டு, பால், நெய், வெல்லத்துடன்கலந்தளள் படைப்பார்கள். முடிவில் பாயசம் நிறைந்த வெண கலப்பாத்திரம் தானமாக் கொடுப்பதுவழக்கம. இதுபோது எல்லாப பலன்களேயும் கொடுக்கவல்ல இந்திரன் வழிபாடு செய்தல் வழக்கம் என தேவி புராணம் கூறுகிறது. இந்திர விழாவைச் சங்க காலத்தில் கொண்டாடியதற்குக குறிப்பு இல்லை எனினும், சங்க மருவிய காலத்தில் கொண்டாடியதற்கு இரட்டை காப்பியங்களான சிலப்பதிகாரம், மணிமேகலை இதனைச்சிறப்பாகக்கூறுகின்றன. அந்தவிழா எவவாறு நடநதது என்பதைக் காணபோம்.

## இந்திரன்

இந்திர விழாப்பற்றி அறியுமுன் இந்திரனைப் பற்றி சற்றுத் தெரிந்துகொள்வோம். இந்திர உலகத்தின தலைவன், வேதகாலத் தெய்வங்களில் முதன்மையானவன். ரிக்வேதத்தில் நான்கில் ஒரு பகுதிப் பாடல்கள் இநதிரனைப்பற்றிக கூறுகின்றன. சங்க காலததில் நான்கு நிலத்தெய்வங்களுள் ஒருவனாகக் கருதப்பட்டான.

"வேந்தன் மேய தீம்புனல் உலகமும்"

என்ற தொல்காப்பியர் நூற்பாப்படி இவனை மருதநில தெய்வமாக வணங்கினார்கள்.

இந்திரன் அதிதி தேவிக்கும், கஸ்ய பமுனிவருக்கும் மைந்தனாக பிறந்த வன். இவனுடைய மனைவி - இந்தி ராணி. மகன்-சயந்தன. வாகனம்-ஐராவதமெனும் யானை, உச்சைச் சிரவம் எனும் வெள்ளைக்குதிரை, செல்வம்-கற்பகத்தரு. பானம்-அமிர் தம் ஆகும். இந்திரன நூறு அஸ்வ மேதயாகஞ் செய்து இந்திரபதம் அடைந்தவன் என்று அபிதான சிந் தாமணி கூறுகிறது.

## இந்திரவிழா தோன்றக் காரணம்

சோழநாட்டை ஆண்ட மன்ன ருள் தலை சிறந்தவனாவான் தூங் கெயில் எறிந்த கொடித்தோட் செம் பியன். அவன் அகத்திய முனிவரின் ஆணைப்படி, இந்திரனை இருபத் தெட்டு நாட்கள் இவ்விழாவில் கலந்து கொள்ளவேண்டும் என வேண்ட, இந்திரனும் அவ் விருப்பத் துக்கு இணங்கினான். அன்று முதல் இவ்விழா சிறப்பாக நடைபெறுகிறது என்று மணிமேகலை கூறுகிறது.

## இந்திர விழா

மருவூர்ப்பாக்கம், பட்டினப்பாக் கம் என்னும் இருபகுதிகளுக்கு இடை யில் உள்ள இடத்திற்கு சித்திரை மாதத்தில் சித்திரை நட்சதிரம் முழு நிலவுடன சேருகின்ற சித்தரா பௌர்ணமி நாளிலே

"பெருநில மன்னன் இருநிலம் அடங்கலும்
பசியும் பிணியும் பகையும நீங்கி
வசியும் வளனும் சுரக்க"

(சிலம்பு: 5: 7 -73)





ஸ்ரீ சாமுண்டேஸ்வரி கோயில் - மைசூர்.

என்று இந்திரன் ஏவலால் முன்னர் வந்து சேர்ந்த காவற் பூதத்திற்கு பூவும் புகையும் படைத்து மறக்குடி மகளிர் வழிப்பட்டனர். இதே போன்று ஐவகை மன்றங்களிலும், மண்டபங்களிலும் பலிகளை இட்டு வழிப்பட்டுப் போற்றினர்.

## கொடியேற்றல்

இந்திரனுக்குரிய வச்சிரகோட் டத்திலே இருந்த முரசினை கச்சை யானை பிடற்தலையேற்றி, இந்திர விழா தொடக்கம், முடிபுப் பற்றிய விவரங்களை முரசுயறைந்து நகருக்கு அறிவித்தனர். பின்னர் இந்திரனுடைய கோயிலில் மங்கல கொடியை நகர மக்கள் யாவரும் அறியும்படி வானளாவ ஏற்றினர்.

## கோமானை நீராட்டல்

ஐம்பெருங்குழு முதலாக வணிக குமாரர் ஈறாக அனைவரும் ஒருங் கே திரண்டு வந்து குளிர்ந்த காவிரியி லிருந்து புண்ணிய நீர் கொணர்ந்து விண்ணவர் தலைவனைநீராட்டினர். பிறகு அவனுக்கு விழா எடுத்து பூசை செயதாாகள்.

## பிற கடவுளா திருவிழா

இந்திரனுக்கு விழா நடக்கின்ற அதே காலத்தில் பிற கோயில்களில் உள்ள கடவுளர்க்கும் விழா நடை பெற்றது. சிவன், முருகன், பலராமன், திருமால், மன்னன ஆகிய கோயில் களில் நான்முகன் அருளிய மறையில் சிறிதும் பிறழாது தீமுறை வேள்வி கள் நிகழ்ந்தன

"பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்
அறுமுகச் செவ்வேள் அணிதிகழ் கோயிலும்
வால்வளை மேனி வாலியோன் கோயிலும்
நீலமேனி நெடியோன் கோயிலும்
மாலை வெண்குடை மன்னவன் கோயிலும்"

(சிலம்பு 5: 169-173)

ஊரில் விழா நடக்கின்ற காலத்தே சொற்பொழிவுகள் நடைபெறுவது வழக்கமாகும். அம்முறைப்படி இவ் விழா காலத்தில், அறவோர்ப் பள்ளி யிலும், அறச்சாலைகளிலும், புண்ணி யத்தலங்களிலும் சொற்பொழிவுகள் நடைபெற்றன. விழா யாவரும் மகிழ்ந்து கொண்டாடுகின்ற நாளாத லின் பிற உயிர்களைத் துன்புறுத்த மக்களும், மன்னனும் விரும்பமாட் டார்கள். இவ்விழாவின்போதுசிறைக் கைதியாக இருந்த மன்னர்களின் விலங்குகள் அகற்றப்பட்டன. இந் நாளின்போது இசை நிகழ்ச்சிகள் ஓயாமல் இரவும் பகலும் நடந்தன. இவ்வாறு இவ்விழா சிறப்பாக நடை பெற்றது. விழாவின் முடிவுநாளன்று மக்கள் அனைவரும் கடலாடி இன் புற்றனர்.

இன்றைய "சித்திரா பௌர்ணமி" யன்று இந்திரனுக்கு விழா கொண்டா டப்படவில்லை என்றாலும், அவ்வவ் வூரில் உள்ள இறைவனைக் குளக் கரை, ஆற்றங்கரை எடுத்துச்சென்று வழிபடுவதைக் காண்கிறோம். அன் றைய தினம் மக்கள் சோலை, ஆற்று மணற் பரப்பு, கடற்கரை சென்று தாங்கள் கொண்டு சென்ற திண்பண் டங்களைத் தம் சுற்றத்தோடு உண்டு மகிழ்வார்கள். அங்குள்ள சோலைகளில் தேன் உண்ணவரும் வண்டுகளின் ரீங்காரம், காதுக்கு இனிமையாகவும், தென்றல் உடலின் பத்தையும், நிலாவின் ஒளி கண் ணுக்குஇனிமையும்கொடுதது நம்மை இன்பத்தின் எல்லைக்கு எடுத்துச் செல்கிறது. இந்நிலை,

"மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்"

என்று நாவுக்கரசர் அனுபவித்த இன்பம் போன்று விளங்கி அனை வரும் இன்புறுவர். ★

# திருப்பதியில் கங்கையம்மன் திருவிழா

தெய்வ வணக்கத்திற்கு அடிப்படைக் காரணங்கள் அச்சமும், அன்புமாகும். இயற்கைச் சக்திகளான பஞ்ச பூதங்களால் உண்டாகும் அழிவினையும், நோய்களால் ஏற்படும் துன்பங்களையும் எதிர்த்து நிற்கலாற்றாத மனிதன் இயற்கையின் பின்னே ஒரு சக்தி இயங்குவதை உணர்ந்து அவைகளைத் தெய்வமாகப் படைத்துக் கொண்டு வழிபடுகிறான். அவ்வாறு வழிபடுவதன் மூலம் அவ்வியற்கைத்துன்பங்களினின்றும தன்னைக் காத்துக் கொள்ள இயலும் என்றுநம்புகிறான்.


திரு. ஜே. மனுவேல்,
திருப்பதி.


கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம் என்பது முதுமொழியாகும். இன்று கோயில்கள் இல்லாத ஊரே நாட்டில் இல்லை. மக்கள் தாம் வழிபடும் தெய்வங்களில் ஆண் தெய்வங்கள், பெண் தெய்வங்கள் என இரு பகுதியாகப் பிரித்து வழிபட்டு வருகின்றனர். பத்ரகாளி, எல்லைப் பிடாரி, காளியம்மன், திரௌபதி, காமாட்சி, பரமேஸ்வரி, மாரியம்மன், மீனாட்சியம்மன், துர்க்கை, விசாலாட்சியம்மன் முதலியன மக்கள வழிபட்டுவரும் முக்கிய பெண் தெய்வங்களாகும்.

மேற்கண்ட பெண் தெய்வங்களுள் மிகவும் சிறப்பானதொரு இடத்தைப் பெற்ற தெய்வம் மாரியம்மை அல்லது கங்கையம்மை. ஆந்திரமாநிலம் சித்தூர்மாவட்டத்தில் கங்கையம்மன் திருவிழாவை மிகவும் சிறப்பாகக் கொண்டாடுகின்றனர். மாவட்டம் முழுவதும் ஆங்காங்கே பெரிய திருவிழாக்களை நடத்துகின்றனர். வான வேடிக்கைகளும் இடம்பெறுவதுண்டு.





தெலுங்கர் இவ்விழாவினை மிகவும் சிறப்பாகக் கொண்டாடுவர். இதனை "கங்கம்மா ஜாத்ரா" என்றழைக்கின்றனர். ஒருவார காலமாக இந்த விழா கோலாகலமாக நடைபெறுகின்றது. சித்தூர் மாவட்டத்தில் தமிழரை விட தெலுங்கர் மிகவும் இவ்விழாவுக்கு முக்கியத்துவம் அளிக்கின்றனர்.

### காலமும் நேரமும்

ஒவ்வொரு ஆண்டும் கங்கையம்மன் திருவிழா ஆங்கில மாதமாகிய 'மே' மாதத்தில் நடைபெறுகின்றது. திருப்பதியில் இவ்விழா ஒரு வாரம் நடைபெறுகின்றது. இதன் தனிச்சிறப்பு என்னவென்றால் ஒவ்வொரு ஆண்டும் செவ்வாய், புதன் ஆகிய நாட்களில் மட்டும்தான் இப்பண்டிகை கொண்டாடப்படுகின்றது. வருடத்திற்கு வருடம் தேதியில் மாற்றம் காணப்பட்டாலும் கிழமைகளில் மாற்றம் இல்லை.

### பெயர்க்காரணம்

கங்கை + அம்மன + திருவிழா = கங்கையம்மன்திருவிழா என்பதாகும். கங்கை என்றால் தணணீர். மழை, வேண்டி பாமரமக்கள் மேற்கொண்ட பக்தியின் முதிர்ச்சியே இன்று விழாவாக உருவெடுத்துள்ளது எனக் கொளளலாம். இன்னுங்கூட கிராமங்களில் மழை குறித்த காலத்தில் பொழியாவிட்டால் கங்கையம்மன் திருவிழா நடத்துவதைப் பார்க்கலாம். தண்ணீரைப் பெண்ணாக நினைத்து 'அம்மன்' என்ற பட்டத்தைக் கொடுத்துள்ளனர். சில இடங்களில் காளியம்மன் திருவிழா என்றும் அழைககின்றனர். மாரி + அம்மன் — மாரியம்மன் என்பதாகும். மாரி என்றால் மழை என்று பொருள்

படும். நகரி, புத்தூர் வட்டங்களில வாழ்கின்ற முதலியார் வகுப்பைச் சார்ந்தவர்கள் "மாரியாத்தா திர்ணா" என்று சொல்கின்றனர். இதன் பொருளும் முன் குறிககப் பட்டவையே. திருப்பதியில் இவ் விழாவினை "கெங்கமமா ஜாதரா" என்றும் "கங்கபண்டகா" என்றும் அழைக்கின்றனர். ஜாத்ரா என்பது திருவிழா. பண்டகா என்பது பண்டிகை / திருநாள் என்று பொருள் படும்.

**சாட்டு**

பறைசாற்றுதலை திருப்பதியில் சாட்டு என்று அழைக்கின்றனர். "சாட்டு" என்றால் பறைசாற்று, அறிவிப்பு, அறிவித்தல, சொல்லுதல் சாற்றுதல் என்று பொருள்படும். இத்தொழிலை முழுக்க முழுக்க ஹரிஜனங்களே செய்கின்றன அதாவது கங்கையம்மன் திருவிழாவுக்கு முன் (10 நாட்களுக்கு முன்) கருப்பு நிறமாக உள்ள ஆட்டைக் கொண்டு வருவர். அந்த ஆட்டை பலியிட்டு வெளியேறிய இரத்தத்துடன் சோறு கலந்து முறத்தில் எடுத்துக்கொண்டு வீதிவீதியாக வலம்வருவர். வலம் வரும்போது இரத்தம் கலந்த சோற்றை இரைப்பர். அந்நேரம் பறை அடிக்கப்படும். அதாவது 'இன்னும் பத்து நாட்களுக்குக்குப் பிறகு நம் ஊரில் கங்கையம்மன் திருவிழா நடைபெறவுள்ளது. அனைவரும் ஆயத்தமாக இருங்கள்' என்று என்று முன்கூட்டியே அறிவிக்கும் செயலே 'சாட்டு' ஆகும். இவ்வாறாக சாட்டும் நாளில் வெளியூர்க் காரர்கள் யாரெல்லாம் திருப்பதியில் இருந்தார்களோ அவர்கள் எல்லோரும் கங்கையம்மன் திருவிழாவின் போது நிச்சயம் வருவர். சாட்டில் அகப்பட்டுக் கொண்டவர்கள் தவறாது திருவிழாவில் இருக்க வேணடும், இல்லையெனில் ஏதாவது கேடு விளையக்கூடும் என ஊர்மக்கள் நம்புகின்றனர்.

**அறிவியலும் அம்மனும்**

பொதுவாக மே, ஜுன் மாதங்களில் கோடை வெப்பம் கொளுத்தும். முற்பகல் 11 மணி முதல் பிற்பகல் 3 மணி வரை மனித நடமாட்டத்தைக் காண்பது மிகவும் கடினம். இக்காலங்களில் வெப்பத்தை அதிகப் படுத்தும் உணவு வகைகளை உட் கொண்டால் உஷ்ணம் அதிகமாகி 'அம்மை' வார்க்கும். அந்நேரம் நோய்வாய்ப்பட்டவருக்கு மோர் சாதம் மட்டுமே கொடுப்பர். குளிர்ச் சித் தரும வேப்பிலையில் படுக்க வைப்பார். அந்நேரம் அம்மனுக்குப் பிரார்த்தனை மேற்கொள்வர் வெப்பம் தணிந்து குளிர்ச்சியுண்டாக வேண்டும் என்பதே இப்பிரார்த் தனையின் நோக்கமாகும். அம்மனுக்கு பூசை சரியாக செய்யவில்லை, 'பலி' கொடுக்கவில்லை. எனவேதான் அம்மன் கோபப்பட்டு மனிதர்களுடைய உடலில் முத்தெடுத்துள்ளாள் என நம்புகின்றனர். அவ்வாறு நமபிய மக்கள அந்நோய்வாய்ப்பட்டவரை மிகவும் கவனமாகப் பார்த்துக கொள்கின்றனர். அக்காலத்தில் திட்டுப்பட்டவர்களைக் கூட வீட்டுப் பக்கம் வரவிடுவதில்லை. எண்ணெய் விட்டு, குழம்பு தாளிப்பதில்லை. அசைவ உணவு உட்கொள்ளுதல் இல்லை. நோய்வாய்ப்பட்டவரது மனைவி, தாய், சகோதரி போன றோர் தலையில் பூச்சூடிக் கொள்வதில்லை. மஞ்சள் பூசிக் குளிப்பதும் இல்லை. இக்காலத்தில் அம்மனுக் குச் செய்ய வேண்டிய கடைமைகளை மிகவும் கவனமாகச் செய்கின்றனர்.

**உருவமும் வழிபாடும்**

திருப்பதியில் 'தாத்தய்ய குண்டா' என்ற குளத்துக்கரையில் கங்கையம் மனுக்கு கோவில் அமைக்கப்பட்டுள் டுள்ளது. ஒவ்வொரு ஆண்டும் இவ் விழாவினை இந்த இடத்தில் மிகவும் சிறப்பாக நடத்துகின்றனர். செவ் வாய்ககிழமை இரவு 8 மணி முதல் கங்கையம்மன் திருவுருவத்தை சித்த ரிக்கும் பணி ஆரம்பமாகின்றது. அதிகாலை அல்லது 4 மணிக்குள் இப்பணி முடிவடைந்து விடும். தலை சிறந்த கைவினைஞர்களைக்கொண்டு கங்கையம்மன திருவுருவம் உருவாக் கப்படுகின்றது. களிமண் + உமி கலந்து உருவத்தைச் செய்கின்றனர். உருவம் அமைக்கப்படுவதற்கு முன்பே திருப்பதி நகரில் விழாக் கோலம் பூண்டிருககும் 'தாததய்யா குணடா' எனற குளத்துககரையில் கூடும் மக்கள் கூட்டம் சொல்லி மாளாது. செவ்வாய் மாலை 4 மணி முதல்வழிபாட்டைநடத்தமக்கள் கூட் டம் ஏராளமாகச்சேர்ந்துவிடுகின்றது.

**பொங்கல்**

திருப்பதி மக்கள் தாத்தய்யாகுளத் துக்கரையில் அடுப்பு வைத்து சிறு பாத்திரத்தில் சோறு பொங்குவர். இதனையே பொங்கல் என்பர். இதனை தெலுங்கில் 'பொங்கிலி' என்கின்றனர். சோறு சமைத்து அம் மனுக்குப் படைப்பர். புளித்தமாவு அல்லது பாக்கம் போன்றவற்றையும் அம்மனுக்குப் படைக்கின்றனர்.

**நெருப்புச்சட்டி**

துளையிடப்பட்ட சிறிய சட்டி, பானைகளில் நெருப்பை அள்ளிக் கொண்டு அந்த சட்டியின் மேல் பாகத்தில் மஞ்சள் பூசி, குங்குமம் வைத்து, வாய்ப்பகுதியில் வேப்பிலை யால் தோரணம் கட்டி அந்த நெருப் புச் சட்டியைக் கையில் பிடித்துக் கொண்டு கங்கையம்மன் கோவிலை வலம் வந்து, வணங்கி, பின்னர் அந்த நெருப்புச் சட்டியை உடைத்து விடு வர். இங்கு இப்பிரார்த்தனை சிறப்பு வாய்ந்ததாகக் கருதப்படுகின் றது

**வேடிக்கையும் விநோதமும்**

திருப்பதியில் கங்கையம்மன் திரு விழாவின போது வானவேடிக்கைகள் சிறப்பாக நடத்தப்படுகின்றன. இவ் வேடிக்கை சின்னஞ்சிறிய இளஞ் சிறார்களுக்கு மகிழ்ச்சியைத்தருகின் றது. இந்நகரிலுள்ள ஆதிதிராவிடர் ஆதி ஆந்திரர் போன்ற மக்கள் மாறு வேடம் போட்டுக் கொண்டும், பறை அடித்துக் கொண்டும் வீதி வீதியாக வலம்வருவர். ஒவ்வொரு கடையிலும் அன்பளிப்பாக பணம் கேட்பர். கடை முதலாளியும் பொருளோ, பணமோ இவ்ஏழை மக்களுக்கு மனமுவந்து அளிப்பர். இவர்களுடைய நடனங் கள், ஆட்டங்கள்போன்றவை பார்க்க வேடிக்கையாக இருக்கும்.

வாலிபக் கூட்டங்கள் கூட்டமாகச் சேர்ந்து தனியாக ஊர்வலம் வருவர். சிலம்பாட்டம், கோல்சண்டை, குஸ்தி கரகாட்டம், கோலாட்டம் போன் றவை இவர்கள் செய்யும சாகசங் களாகும். இவ்வாலிபர்களின் வீர சாகசங்களை பலரும கண்டு வியப் படைவதும் உண்டு.



# நரசிம்ம அவதாரச் சிறப்பு

திரு ச இராமலிங்கம், M A , M.Phil.
காவேரிப்பாக்கம்.

'அவதாரம்' என்ற சொல்லிற்கு 'இறங்குகை' என்பது பொருள். இறங்குகை என்றால் உயர்நிலையி லிருந்து தாழ்நிலைக்கு வருதலைக் குறிக்கும். இறைவன் 'ஆதி அம் சோதி உருவை அங்கு வைத்து இங்குப் பிறந்து மனிதர் உய்யக் கடைப் பிடிக்க வேண்டிய அறநெறிகளைத் தாம் நடத்திக் காட்டும் திருவிளை யாடலே' அவதாரமாகக் கருதப்படு கின்றது.

அவதார நோக்கம் :

நல்லோரை நன்கு காக்கவும், பொல்லோரை அறவே நீக்கவும், அறத்தை நன்கு நிலைநாட்டவும் இறைவனது அவதாரம் நிகழ்கின்றது. காலத்தின் இயல்பிற்கும் மனித னுடைய போக்கிற்கும் ஏற்றவாறு புதிய அறநெறிகளைக் காட்டி மக்க ளைப் பரம்பொருளிடம் சேர்த்தலும் அவதாரத்தின் நோக்கமென்றுகலைக் களஞ்சியம் விளக்க மளிக்கிறது.

சைவர்கள் சிவபெருமானின் திருச் செயல்களை "திருவிளையாடல்கள்" என்னும் திருப்பெயரால் போற்றி வணங்குவர். வைணவர்கள் திரு மால் செய்த அருட்செயல்களை 'அவதாரம்' என்ற திருநாமம் இட்டு பத்து அவதாரமாக வரிசைப்படுத் திப்போற்றி வழிபடுகின்றனர். அவ்வ வதாரங்கள்முறையே மச்சம்,கூர்மம், வராகம், நரசிம்மம், வாமனன், பரசு ராமன், இராமர், பலராமன், கண் ணன், கல்கி என அமையும்.

இத்தசாவதாரத்தில் நரசிம்ம அவ தாரம் பெறும தனிச் சிறப்பினைக் காண்போம்.

நரசிம்ம அவதாரத்தின் சிறப்பு:

தசாவதாரங்களில் மிருக நிலைக் கும் மனித நிலைக்கும் பாலமாக அமைவது நரசிம்ம அவதாரமே ஆகும். மிருகங்களின் அரசாகத் திகழ்ந்த சிம்ம உருவமும், பிறப்பில் சிறப்பான மனிதப் பிறவியின் மனித உருவமும் ஒருங்கே அமையப்பெற்ற இருவுருவின் திருவுருவாய் வந்து தோன்றிய பெருமை நரசிம்ம வடிவத்திற்கு உண்டு.

'விஷ்ணு' என்ற காரணப் பெய ரின் மூலவினைச் சொற்களைக் கொண்டு, விஷ்ணு உலகத்தில் பரந் துள்ளவர், உலகத்திற்கு நன்மை பயப்பவர், பக்தர்களை உலக மாயை யிலிருந்து விடுவிக்கின்றவர், உலகத் தின எல்லாப் பொருளினுள்ளும் புகு கின்றவர் எனறு பொருள் கொள்ள லாம். அவ்விஷ்ணு என்ற பெயரின் சிறப்பை இரணியன் காட்டிய தூணி லிருந்து வெளிப்பட்டதன் மூலம் இறைவன் மெய்ப்பித்தான் என்று சொன்னால் அது மிகையாகாது.



உண்மையான அடியவர்க்காக, அவர்களின் சொற்களை மெய்ம்மை கொளச் செய்ய அஃறிணைப் பொரு ளான தூணிலிருந்தும் வெளிப்பட் -ருள்வான் இறைவன் என்ற உண் மையை இவ்வவதாரம் உணர்த்து கிறது.

சரணாகதி தத்துவம் :

திருமாலை காக்கும் கடவுளாகப் போற்றி வணங்குதல் மரபு. 'ஆதி மூலமே' என்று அழைத்த கஜேந்திரனு (யானை)க்காக ஓடோடிவந்து காத்து ரட்சிக்கும் சிறப்பு குணம் கொண் டவன் இறைவன். அச்சரணாகதி தத்துவம் நரசிம்ம அவதாரத்தின் மூலம் மேலும் புலப்படுகிறது.

"குலம் தரும் செல்வம் தந்திடும்
அடியார்
படுதுயர் ஆயின எல்லாம

நிலம் தரம் செய்யும் நீள்விசும்பு
அருளும்
அருளொடு பெரு நிலம் அளிக்கும்
வலம் தரும் மற்றும் தந்திடும் பெற்ற
தாயினும் ஆயின செய்யும்
நலம் தரும் சொல்லை நான் கண்டு
கொண்டேன
நாராயணா என்னும் நாமம்"

என்ற திருமங்கையாழ்வாரின்பாசுரம் நாராயண மந்திரத்தின் சிறப்புகளையும், அம்மந்திரம் தரும் பலன்களையும் எடுத்து இயம்பும். அந்த நாராயண மந்திரத்தையே தாம் பெற்ற உபாயமாகக் கொண்டு பிரகலாதன், இரணியன் கொடுத்த துன்பங்களிலிருந்து மீண்டான். இவ்வாறு சரணாகதித் தத்துவத்தின் சிறப்பையும் உணர்த்துவதாக இவ்வவதாரம் விளங்குகின்றது.

தீயோரை அழித்து நல்லோரைக் காத்தல்:

இரணியன், தன்னை வணங்கவில்லை என்ற ஒரே காரணத்திற்காக அவனைக் கொன்றார் என்றால் அது நரசிம்ம அவதாரத்திற்கே இழுக்காகும். இரணியனுடைய கதையை அறிந்தோர் சிந்தித்துப் பார்க்க வேண்டும். திருமாலைக் காணாததால், அவர்புகழ் பேசும் அப்பாவி மக்களைத் தண்டிப்பதாகவும், அவர்களை அழிப்பதாகவும் அவன் செயல் அமைகிறது. கடும் சினங்கொண்டு எழு புவனங்களுக்கும் தீங்கு செய்த காரணத்தினால்தான் அவனுடைய அறமற்ற செயலை ஒடுக்க சினமிக்க அவதாரம் எடுத்தார் இறைவன்.

வலிமை பெற்றுவிட்டாலே தமமினும் மெலியவரைத் தண்டித்தல் என்ற நிலை உருவானால் அமைதி என்றுமே நிலவாது. வல்லரசுகள் தம்மிடையேயுள்ள அணு ஆயுதங்களால் வளர்ந்துவரும் நாடுகளைப் பயமுறுத்திக் கொடுங்கோல் ஆட்சி செலுத்துதற்குச் சமமாகும் இச்செயல். தாம்பெற்ற வரங்கள் என்ற பலத்தினால் இரணியன் இழைத்த தீங்குகளே அழிவுக்குக் காரணமாக அமைந்தது.

மற்றொன்றையும் நாம் சிந்தித்துப் பார்க்க வேண்டும். மாவலி இரணியனைப்போல் கொடுமைகள் செய்யாமலிருந்தபடியால்தான் அவனிடம் சென்று யாசித்து நிலம் பெற்று "பொல்லாக் குறள்" என்றும் 'கள்வன்' என்றும் அன்பின் மிகுதியால் ஆழ்வார்கள்மூலம் வசையும் வாங்கிக் கொண்டான் இறைவன்.

இவற்றையெல்லாம் உற்று நோக்கும் பொழுது உயர்ந்த சக்தியைப் பெற்றவர், அச்சக்தியை உலக நன்மைக்குப் பயன்படுத்துதலே சிறப்பானதாகும். மாறாக அச்சக்தியைத் தீயவழிகளில் செலவிட்டால் அழிவு நிச்சயம் என்ற உண்மை பெறப்படும்.

இவ்வாறு பலவகைகளிலும் சிறப்புற்று விளங்கும் நரசிம்மனைப் போற்றி வணங்கி நாமும் உய்வோமாக!



# வைகுந்தா வழிகாட்டு!

எழுபிறப்புத் தீவினையை நாங்கள் நீக்க
ஏழுமலை மீதுநின்ற வேங்க டேசா!
தொழுதுதினம் வணங்குபவர் துன்பம் தீர்க்கும்
துளசிமாலைத் தூயவனே! தேவ தேவா!
கொழுந்தொன்று காற்றினிலே அசைந்த சைந்து
கொம்புதனைக் காணாமல் அசைதல் போல
அழுதழுது புலம்புகிற உள்ளத் திற்குள்
ஆதார மாய்அமர்ந்து வழியைக் காட்டு

பெருமலைபோல் துன்பங்கள் வந்துற் றாலும்
பெருந்துயரம் அடையாதே என்ப தற்கே
திருமலையில் வீற்றிருக்கும் கமலக் கண்ணா!
தேவர்கள் வணங்குகிற கருணை மன்னா!
பெருங்கடலில் துடுப்பில்லா ஓடம் ஒன்று
புயற்காற்றில் அகப்பட்டுச் சுழலல் போல
வருந்திதினம் புலம்புகிற உள்ளத் திற்குள்
வந்திருந்து அமைதிதர வழியைக் காட்டு

மேகங்கள் தவழ்கின்ற மலையின் மீது
மேன்மையுடன் நின்றிருக்கும் மேக வண்ணா!
தாகத்தால் தவிப்பவர்க்கே அதைத் தணிக்க
தண்ணீர்தான் போதாதா! தயவு காட்டு
வேகமுடன் சுழல்கின்ற உருளைக் குள்ளே
வெட்டி வைத்த கரும்புபோல் நசுக்கப் பட்டு
சோகத்தால் புலம்புகிற உள்ளத்திற்குள்
சோதரனாய் வந்தமர்ந்து வழியைக் காட்டு

உலகெங்கும் ஒளிவீசி அருள்பா லிக்க
ஓங்கியசீர் மலைமீது குடிகொண் டுள்ள
உலகளந்த பெருமாளே! ஒன்று கேட்பேன்
உயர்வானில் பறக்கின்ற பட்டம் ஒன்று
நிலைமாறி நூலறுந்து விட்டாற் போல
நெடும்புவியில் சம்சார சாக ரத்தில்
அலைமோதிப் புலம்புகிற உள்ளத் திற்குள்
அன்னையென வந்தமர்ந்து வழியைக் காட்டு

உன்னைநான் நினைக்கையிலே என்நெஞ் சத்தில்
ஊறிவரும் உணர்ச்சிகளை எழுது தற்கு
வன்னமிகும் தமிழினிலே வார்த்தை இல்லை
வைகுந்தா! வாழ்வளிக்கும் சீனி வாசா!
முன்னைசெய் தீவினைகள் தொடர்ந்து வந்து
மோதுங்கால் அனல்பட்ட புழுவைப் போன்று
இன்னலிலே புலம்புகிற உள்ளத் திற்குள்
இலக்குமியோ டமர்ந்துநல்ல வழியைக் காட்டு

புலவர் அ. க. முனுசாமி, எம் ஏ., பி.எட்.,
விழுப்புரம்

# கருங்கடலும் கருணையங்கடலும்

சீதையைச் சிறை மீட்க இராமன் இலங்கை நோக்கிச் செல்கிறார். கடல்போன்ற வானரப் படையுடன் அவர் தென் கடற்கரையை அடைகிறார். -அவர் அங்கு அடைக்கலம் அடைந்த விபீஷணனுக்கு அபயம் அளிக்கிறார். இராமனுக்கு விபீஷணன் இலங்கையைப்பற்றி விரித்துரைக்கிறான். இராகவன் இலங்கை செல்லும் வழியை விபூஷணனோடு ஆராய்கிறார்.

---

திரு. அலங்காரம் ஆர். தேவராஜன்,
ஸ்ரீவில்லிபுத்தூர்.

---

விபீஷணன் அண்ணலை நோக்கி, 'ஐயனே! முதலில் நம சேனைகள் இக்கடலைக் கடக்க வேண்டும். அதற்காக, இக்கடலில் அணை ஒன்று அமைக்க வேண்டும். அணை கட்ட வேண்டுமென்றால் கடலரசன் அனுமதி வேண்டும். கரந்துறையும் உமது திருவுருவைக் கடலரசனான வருண தேவன் அறியாதவனல்ல. தேவர்களின் துயர் துடைக்கவே தேவரீர் அவதரித்திருக்கின்றீர். தேவர்களில் ஒருவனாகிய வருணதேவன் இதை உணராதவனல்ல. அன்றியும் நம் குலத்தலைவரான சகரராலே இவ்வலைகடல், அகன்று விரிந்து பரந்து கிடக்கிறது. அந்நன்றியையும் அவன் மறவான். வேண்டுவோர்க்கு வேண்டிய பயனைத் தரும் கருங்கடல் நம் படை செல்வதற்கும் வழிவிடும் என்பது உறுதி. ஆதலால் தேவரீர் வருணனை இரநது வழி வேண்டுவீராக' என்று கூறினான்.

விபீஷணன் இராமனைச் சரணம் புகுந்து அவன் பேரருளைப் பெற்றான். எனவே பிறர் அருளைப் பெறுவதற்கு சரணாகதியே சிறந்த உபாயம் என்று அன்னான் கருதி இராமபிரான் வருணனைச்சரண் புகுவதே சிறந்தது என்றான். இராமனும் வீடணன் சொல்லுக்கு இசைந்தார்.

“தருண மங்கையை மீட்பதோர் நெறி
தரு கென்னும்
பொருண யந்துநன் னூல் நெறி
யடுக்கிய புல்லில்
கருணையங்கடல் கிடந்தது கருங்கட
னோக்கி
வருண மந்திர மெண்ணினன் விதி
முறை வணங்கி”

என்பது கவிசக்ரவர்த்தி கம்பர் வாக்கு.

சமுத்திர ராஜனிடம் சரணாகதி செய்யச் சம்மதித்த சக்ரவர்த்தித் திருமகன், விதிமுறைப்படி கடலர



சனை வணங்கினார். வருண மந்திரத்தை வாயினாற் சொல்லி மனத்தினால் எண்ணினார். தருப்பைப் புல்லைப் பரப்பி அதன்மீது சயனித்து வருணனை வழிபட்டார். கருங்கடலை நோக்கிக் கருணையங் கடல் கிடந்தது என்னுமாறு இராகவன பள்ளிகொண்டெழுந்தருளி வருணனிடம் வரம் வேண்டினார்.

பாற்கடலிற் பாம்பணையிற் பள்ளிகொள்ளும் பரமன் பார்மீது பசும்புல்லிற் படுத்துத் தவமிருந்தான். கானகத்தில் கல்லணை மேல் கண்துயின்ற காகுத்தன், கல்லணை கட்டப் புல்லணைமேற் கண் வளர்ந்தான. அன்று கடலைக் கடைந்து திருமகளைப் பெற்ற அமலன, இன்றும் திருமகளைப் பெறவே கடலில் அணை கட்டக் கருதினான. சர்வ லோக சரண்யன் சமுத்திர ராசனைச் சரணமடைந்தான்.

**கடல் பரந்து விரிந்து அகன்று பூமியைச் சூழ்ந்திருப்பதால், காகுத்**



நல்மங்கைபாகர் திருக்கோயில்—
பிரான்மலை
எம். ராஜகோபாலன்-சென்னை.

தனைவிடத்தானே பெரியவன் என்ற கர்வத்தோடிருந்தது. பூமியை ஆளும் பூபதியைவிடப் பூமியைச் சூழ்ந்திருக்கும் கடல், தன்னை பெரிதாக எண்ணி இறுமாப்புடன் இருந்தது. வற்றச் செய்யும் திறமிருந்தும் கடலை நோக்கி வரங்கிடந்தது பற்றியே இராமனைக் கருணையங்கடல் என்றார் கம்பர் பெருமான். இவ்விடத்தில், "கடல் தன்னை போர அளவுடைத்தாக நினைத்திருக்குமாய்த்து; அதுக்காக ஒரு கடல ஒரு கடலோடே ஸ்பர்சித்துக் (மாறு பட்டுக்) கிடந்தாற்போலே இருக்கை; "கருணையங்கடல் கருங்கடல் நோக்கிக் கிடந்தது என்னும்படியிறே". என்று (திருவாய்மொழி 6-9-3 இன) ஈடு வியாக்யானத்தில் அருளிச் செய்திருப்பது கருதத்தக்கது. (அதன் பொருள்:) பெருமாள் தர்ப்பத்தில் படுத்தது, அதுவும் கிழக்கு நோக்கிப் படுத்தது, வருண மந்திரம் ஜெபிப்பது முதலிய நியதி சரணாகதிக்கு உண்டோ என்ன? நம்பிள்ளையும்: விபீஷணன் சரணாகதி செய்ய வந்த போது கடலிலே ஒரு முழுக்குப் போட்டா வந்தான்? பெருமாள் இஷ்வாகு குலத்தவராகையாலும், ஆசாரசீலராகையாலும் தம்முடைய நியமங்களோடே சரணம் புக்கார்; விபீஷணன் இராக்ஷஸ ஜாதியாகை யாலே நின்ற நிலையிலே சரணம் புக்கான்; ஆகையாலே சரணம் புகுவதற்கு ஒரு யோக்யதை தேவையில்லை என்றார் என்பது".

அருமைத் திருமேனியில புழுதி படிய, அழகிய திருமுகத்தில் சூரிய வெப்பம் தாக்க, உபவாசமிருந்தான் இராமன். நாட்கள் ஏழு நழுவி யோடின. கடலரசன் முகம் காட்டவில்லை. இராமன் முகம் சிவந்தது. கண்கள் கனலைக் கக்கின. குளிர்ந்த உள்ளத்திலே கோபம் பொங்கியது. என்னை இந்த மீன் வாழும் குட்டம் லக்ஷியமாகாதவனாக கருதிவிட்டது. கடலரசன் என்னை மதிக்கவில்லை. தாரத்தைப் பறி கொடுத்த இவ னுக்கு [illegible] போலல்லவா இருக்கிறது இவன் செய்கை! இது சாலவும் நன்று. என் பொருட்டு அகத்தில் ஈரமில்லாத இதனைப் புறத்திலும் ஈரமில்லாமல் புலர்த்திவிடுகிறேன். வற்றடிப்பது குற்றமென்று அஞ்சினேன். காட்டில் வாழ்ந்து காயிலை தின்று இல்லாளை இழந்த என்னை ஒன்றுமறியாதவனென்றும், வலிமையற்ற சிறுவன் என்றும் கருதி இக்கடற்றலைவன் அவமதிக்கின்றானோ? நான் நினைத்தால், என் விரல் நகத்தினால் இவனை அழித்துவிடுவேன். அன்று அறுபதினாயிரம் சகர புத்திரர்களால் அகலிடமாகிய இக்கடலை இன்று நான் ஒருவனே அழித்துவிடுகிறேன். அன்பில்லாத இக்கடலை என் வில் அம்பினாலே அழித்துவிடுகிறேன். முன்பு ஓரம்பாலே மராமரங்கள் ஏழையும் ஊடுருவச் செய்தேன்: இப்பொழுது கணை ஒன்று கொண்டு ஏழ் கடல்களையும் ஒழித்துவிடுகிறேன். தண்ணீரை நீக்கி இதனைத் தரைமட்டமாக்கி விடுகிறேன். வானரப்படைகள் வருணன் தலைமீது ஏறித் துகைக் கட்டும். இக்கடலை ஈரப்பசையே இல்லாது செய்துவிடுகிறேன். இதனைச் சொல்வதில் இனிப்பயனில்லை. இரந்து கோடலைவிடக் கரந்து கோடலே மேல். முறைப்படி சரணாகதி செய்தேன்; வரவில்லை. என் கோபமான சொற்களைக் கேட்டாவது வருவானோ என்று நினைத்தேன் இன்னும் வரவில்லை. வில்லைக் கொண்டு வா, இக்கடலரசனைப் புல்லைக் கவ்வச் செய்கிறேன்" என்று அருகிலிருந்த தமபியை நோக்கிக்கட்டளையிடுகிறான்,

"சாபமாநய சௌமித்ரே! சாரம்ஸ்ச ஆஸீ விஷோப மார்
ஸாகரம் சோஷயிஷ்யாமிபத்ப்யாம்
யாந்து ப்லவங்கமா:"

இராமன் அருகிலிருந்த இலக்குவனை, இலட்சுமணா! என்றழைக்கவில்லை. தம்பி! என்றழைக்கவிலலை. சௌமித்ரே! என்றலலவா அழைத்தான்.

நலலவளான சுமதராமதவயன மைந தனே! எனறல்லவா அழைத்தான். தம்பியை இநதச் சமயத்தில இவ்வாறு அழைத்ததில் எவ்வளவு கருததாழம?

''ராமம் தசரதம வித்தி, மாம வித்தி
ஜநகாத்மஜாம்
அயோத்யா மடவீம வித்தி, கச்ச
தாத யதா சுகம '

என்று வால்மீகியும்,

''ஆகாத தனறாலுனக கவவன மிவ்வ
யோத்தி
மாகாத லிராமனம மன்னவன்
வையமீந்தும
போகா உயிர்ததாயர் நம பூங்குழற்
சிதை எனறே
ஏகா இனியிவ்வயி னிற்றலு மேத
மென்றாள்',

எனக கம்பனும் கூறுவது இங்குக் கரு தத் தக்கது.

வனத்திற்குப புறப்படும் இலட்சு மணனை நோககி, 'இலட்சுமணா! இராமனைத் தகப்பனாகவும், சீதையைத் தாயாகவும நினை. இரா மனிருக்குமிடமே உனககு அயோத்தி' என்றல்லவா சுமித்ராதேவி கூறி னாள். தான் எப்படித் தந்தையின் கட்டளையை மீறவில்லையோ அவ் வாறே தம்பியும் தன சொல்லை மறுககககூடாது என்பதை உணர்தத அல்லவா? சௌமித்ரே? என்றழைத் தான். அது மட்டுமா? (சு=நல்ல, மித்ரே=நண்பனே, நல்ல நண்பனே! என்ற மற்றொரு பொருளும் தோன் றக காணலாம். நணபர்களுக்கு இன்ப துன்பம சமமலலவா? எனக்கு இந்தக் கடலரசன் செய்த அவமானம உனககுமில்லையா? தகக தருணத் தில் நண்பனொருவன எப்படி உதவு வானோ அதேபோல நீயும் உதவ வேண்டாவோ? என்ற ஆழ்பொருளை உணர்த்தவே, 'சௌமித்ரே! வில் லைக் கொண்டுவா' என்றான் இராமன்.

இலட்சுமணன ஆதிசேஷனா யிற்றே? எம்பெருமானுக்கு அணை யாயிருபபவனனறோ? கடல நீரை வற்றவைததுவிட்டால், படுக்கை விரிககுமிடததிற்கு எஙகே போவது? என்ன செய்வது? எனறு இலககுவன் சற்றுத் தயங்கினான். தாய சொன் னதைததான் செய்வாயோ? தமை யன் சொல்வதைச் செய்யாயோ? எடு வில்லை? திட்டியின் விடம்போன்ற அம்பையும கொடு எனறு இராமன் கூறவே, வெம்பிய மனத்துத் தம்பி யும் அவற்றை விரைவினில் தந்தார்.

தம்பி தந்த வில்லை நம்பியும வாங் கினார். வாஙகிய வில்லை வளைத தார். கொடிய சுடு கரங்களைத் தொடுத்தார்; கடலரன் மீது விடுத் தார்.

இராம பாணம் சீறிக்கொண்டு கட லுககுள் புகுநதது. காகுத்தன் கணை யால் கலங்காத கடலும் கலங்கியது. அம்புகள் தாக்கவே அலைகள் மலை போல் உயர்ந்து கரைமேல் மோதின. பாணங்களிலிருந்து வெளிவரும் தீ, கனலாய்நீரை எரித்தன. கோதண்டத் திலிருந்து கிளம்பிய கொடுங்கணை கள் கடல் நீரைக கொளு கொளு வெனக கொதிக்கச் செய்தன. நீர் வாழ்வன பட்டன. மீன்கள் வெந்து, தீய்நது, கரிநது, பொரிநதன. கடல் பிராணிகள மேல் அம்புகள் தைபப தால் அவை இரத்தத்தைக கக்கின. கருஙகடல் செங்கடலாய்க காட்சி யளிததது. நெடுஙகடலும் தன் நிலை கலஙகியது. கடலுக்கிறைவன் உட லையும் காகுத்தன் கணைகள் எரிக கத் தொடஙகின. கடற்றலைவனும திகைத்து நெஞ்சுலற, வாய் குழற, அஞ்சி நடுங்கி, தட்டுத் தடுமாறி கடலி லிருநது தோன்றினான். அவன் அழுத கண்ணும, தொழுத கையும், துதிககும நாவுமாக இராகவன் முன் வநது வணஙகினான். அச்சத்தால் 'இராமா! அபயம அபயம்' என்று அலறினான. 'அயோததிககரசே! அறியாமற் செய்த பிழையைப் பொருததருள்க. உலக நாயக! நீயே கோபங்கொண்டால் என் போன் றோர் யாது செய்ய இயலும்; கருணைக்கடலே! உன் கழலன்றி என்னை இரட்சிப்பது வேறொன் றுண்டோ?'



காஞ்சி ஸ்ரீ விஜயேநதிர ஸ்வாமிகளுடன் ஸ்ரீ சரஸ்வதி ஸ்வாமிகள் ஜோதிட மாநாட்டை துவக்கி வைகக அண்மையில வி.ஜி.பி. தங்கக்கடற்கரைககு வருகை புரிந்தபோது
எம். எஸ். அசோக்குமார் - சென்னை

# பிரமோதமே வருக!

கவிஞர் ப. கோவிந்த ராசு, ஈரோடு.

பிரமோதஆண்டாய் நினைவுகள் பெருக்கி
வெற்றிகள் குவிக்கும் புத்தாண்டே !
நவமிகு வளங்களும் நலந்திகழ் செயல்களும்
நாளுமே தேக்குவாய் பல்லாண்டே !

மாலைக்கு வழிபார்க்கும் மல்லிகைப்பூ மெல்லியர்க்கு
மங்கலங்கள் தங்கிடவே மனங்கமழ வருகவே !
வேலைதொறும் தாமுழைத்தும் வினைபயனைத் துய்க்காத
வினைமுடிக்கும் பாட்டாளி வாழ்வோங்கப் பொலிகவே

ஓலமிடும் பசி, பிணியர் ஒடுங்கியுள்ள பாமரர்கள்
ஒளிமயத்தில் நலம்பெறவே உன்னதங்கள் பொங்கவே!
ஞாலமிசை போர்பகையும் நலிவுசெயும் மதவெறியும்
நச்சாகும் வன்முறையும நாசமுறப் பொசுங்கவே !

படையாக நோயாகப் படர்ந்துயரும் கொலைவெறியும்
பயங்கரமும் எறிகுண்டும் பாரினிலே ஒழிகவே !
தடையாகும் பிற்போக்கு தாழ்வுசெயும் வேறுபாடு
சமுதாய மடமை, யச்சம், தீவறுமை தொலைகவே!
("பிரமோத" ஆண்டாய்...... )

பண்பூட்டும் அறநெறியும் பாசமன்பு ஆன்மநேயம்
பார்செழிக்க எப்பாலும் பாய்ந்துநலம் பெருகவே !
இன்பமுடன் மனிதகுலம் எப்போதும் ஓரினமாய்
இசைந்திங்கே அமைதிபெற ஏற்றசெயல் விரிகவே !

ஒழுக்கமுடன் உயர்கல்வி உழவுடன்கைத் தொழில்நுட்பம்
உலகினிலே விஞ்ஞானம் ஓங்கிப்பயன் விளைகவே !
விழுமியநற் குறிக்கோளும் விரிமனத்துச் செயற்திறனும்
விளைசக்தி ஊக்கும், உயர் மானுடமே வெல்கவே!

"சித்திரைச்" செல்வி ! சிறப்புகள் மேவிட
ஜெகமதில் வசந்தம் நாட்டுகவே !
ஒத்துளம் மகிழும் ஒருமைச் சுகந்தம்
உயர்பந்த நேயம் மூட்டுகவே !
("பிரமோத" ஆண்டாய்......)

"கள்ளமா யுலகங்கொள்ளுங் கருணை
யாய் மறையிற் கூறும்
என்னலா காத மூலத்து யாதுக்கு
முதலா யுள்ள
வள்ளலே காத்தி யென்ற மாகரி
வருத்தந் தீரப்
புள்ளின்மேல் வந்து தோன்றும்
புராதனா போற்றி போற்றி",

என்று கூறி இராகவன் பாதப் போதில் சரணம் புகுந்தான்.

காலில் வீழ்ந்த கடற்றலைவன் கூறிய மொழியினைக் கேட்டதும், பொங்கி எழும் பாலில் புனல் தெளித்தாற்போல காகுத்தன் கோபம் அமர்ந்தது. அபயம் என்றதும் அழிக்க நினைத்தவன் உள்ளத்தில் அருள் சுரநதது. அன்புடன் ஸ்ரீராமனும் அவனுக்குஅபயமளித்தான். பின்னர் இராகவன் கடலரசனை நோக்கி 'வருண தேவ ! நான் சகல சக்தியையும் உடையவனாக இருந்தும், சரணாகதி தர்மத்தை உலகுக்கு அறிவிக்கக் கருதி உன்னை இரந்து வேண்டிய போது வராமல் கோபங்கொண்ட பின்னர் நீ குறுகிய காரணம் யாது' என்று வினவினார்.

'கருணைக் கடலே! நாயேன் தேவர்கள் மாட்டு இருந்திலேன். ஏழாவது திரைக்கடலில் மீன்களுடைய போர்த் தொழில் விலக்கப் போயிருந்தேன்; புகுந்தது அறிந்திலேன். பொருத்தருள வேணடும் ஐயனே!' எனப்புகன்றான் வருணதேவன்.

அவனது உரையைக் கேட்ட ஆழியான்இரக்கமுற்று 'வருணதேவ! என் பகழி வீணாகக்கூடாது. இதற்கு ஒரு இலக்கு கூறுவாயாக' என்றான்.

'கருணையங்கடலே! மருகாந்தாரம் என்ற தீவில் கொடிய அரக்கர் பலர் வாழ்கின்றனர். உலகத்தில் உள்ள உயிர்கள் பலவும் அவரால் அழிகின்றன. எனக்கும் அவர்கள் பற்பல தீமைகள் இழைக்கின்றனர். கருணையோடு நுமது கணையை அக்கொடியவர்மீது செல்ல விடுக' என்று வேண்டினான். இராமனும் அவ்வாறே செய்து வருணனுக்கு அருள் புரிந்தான்.

கருணையங்கடல் கருங்கடலுக்கு அருள் சுரந்த வரலாறு இது. இவ் வரலாற்றிலிருந்து எம்பெருமான் தன்னைச் சரணமடைந்தவனைக காப்பாற்றுவதுடன் அவனது விரோதிகளையும் அழித்துவிடுவான் என்பதை உணரலாம். எனவே, நாமும் சர்வலோக சரண்யனான காகுத்தன் கழலிணை வணங்கி நன்மை பல பெறுவோமாக.



# பரசுராம அவதாரம்

திரு. எஸ். இராமசாமி,
மதுரை.

க்ஷத்திரியர்கள்மக்களைக் காப்பாற்றவும், தர்மத்தைக் காப்பாற்றவும் ஏற்பட்டார்கள. ஒரு சமயம் க்ஷத்திரியர்கள் மககளைவிட எண்ணிக்கையில் அதிகமாகவிட்டனா. அவாகள் சாதுவான மக்களை பலவாறு துனபுறுத்தவும், அதர்மத்தை வளர்க்கவும் தலைப்பட்டனர். அவர்கள் நல்ல பலமும் படையும் உடையவர்களாக இருந்ததால்பொதுமக்கள் அவர்களை எதிர்க்க முடியாது தவித்தனர். பொதுமக்களின் சொத்துக்களை அரசாங்க அதிகாரம் மூலம் பறிமுதல் செய்து கொள்வது அவர்களுக்கு ஸ்வபாவமாக இருந்தது. சுயநலமே லட்சியமான இத்தகைய கௌரவ திருடர்களை அழித்து மக்களைச்காப்பாற்ற வேண்டிய அவசியம் பகவானுககு ஏற்பட்டது. தாங்களே போர் செய்ய தகுதி உடையவர்கள், தங்களிடமே சிறந்த ஆயுதம் உண்டு. தாங்களே பலசாலிகள் என்றும், பிறர் நம்மை என்ன செய்யமுடியும்என்றும் இறுமாப்பு அடைந்திருந்த அரசர்களின் கொட்டத்தை அடக்க பகவானும் க்ஷத்திரியனாகவே பிறந்து அவர்களை அடக்கினால அவர்களுக்கு சரியான பாடம் கற்பித்தது ஆகாது. எனவே பிராம்மணனாய்ப்பிறந்து தனி கோடாலி ஒனறாலேயே க்ஷத்திரியா களை அழிகக நினைத்தார்.

ஆகவே இறைவன் ஸ்ரீ பரசுராமராக ஜமதக்னி முனிவரின் பிளளையாக அவதரித்தார். பிராம்மணன் எப்படிப்பட்டவன் என்பதை உலகிற்கு காண்பிப்பதற்காகவே பகவான் அவதாரம் செய்தார். இவருக்கு பரசுராமன என்று பெயர்.

பரசுராமன் பதினாறு வயது அடைந்தார். சாஸ்திரங்களைக் கற்று வில்வித்தையிலும் தேர்ச்சி பெற்றார். சிறந்த பலம் உடையவராக இருந்தார். மாதா பிதாககளிடம பக்தியும், நல்ல ஒழுக்கமும், குணமும், சீலமும உடையவராக இருந்தார். அவர் வீட்டில காமதேனு இருந்தது. அது கேட்டதை எல்லாம் தரும் ப்ரத்யக்ஷ தைவம். அதை அன்புடன் பூஜித்து வந்தார். பிறருக்குக்கேட்டதெல்லாம் தநதாலும் தான் புல்தான் மேயும். அதற்குப்புல் கொண்டுவரபரசுராமன் வெளியே போயிருந்தார். அப்போது கார்த்தவீர்யாாசுனன் என்ற ஒரு அரசன் காட்டுக்கு வேட்டையாட வந்தான். அவன் தத்தாத்ரேயரை உபாசனை செய்து அஷ்டமஹாசித்திகளும் கைவரப் பெற்றிருந்தான். அவனுக்கு ஆயிரம் கைகள் உண்டு. யுத்த சமயத்திலும் மற்ற வேண்டிய சமயங்களிலும் அவைகளை வெளியில் காட்டுவான். அவன் ப்ராம்மணத்வேஷி. ஜமதக்னி ஆச்ரமத்துக்கு வந்தான். அவன் சைன்யத்துக்கும் அவனுக்கும் முனிவர்விருந்து நடத்தினார். 'இவ்வளவு பெரிய விருந்து நடத்த உமக்குப் பொருள் ஏது?' எனறான். 'இதெல்லாம் என் செயலில்லை, இந்தக் காமதேனுவின் செயல்தான்' என்றார் முனிவர். 'அப்படியானால் இந்தப் பசுவைநான் ஓட்டிச் செல்கிறேன்' என்றான் அவன். 'இது சாதாரண பசு இல்லை. இது தெய்வமாகும் இதை தருவதற்கு எனக்கு அதிகாரமில்லை' என்றார். பிறகு அரசனே முனிவரை அலட்சியம் செய்து பலாத்காரமாய் மாட்டை ஓட்டிக் கொண்டு சென்று விட்டான்.

ஆசையுடன் மாட்டுக்குப் புல் கொண்டுவந்த பரசுராமர் மாட்டைக் காணாமல் 'அப்பா நம் பசு எங்கே?' என்று கேட்டார். 'குழந்தாய்! கார்த்தவீர்யார்ஜுனன் கொண்டு போனான்' என்றார். 'நீர் ஏன கொடுத்தீர்!' என்றார் பரசுராமன். 'நான் கொடுக்கவாவது; என்னை மீறிக் கொண்டு போனான். அவனோ க்ஷத்திரியன். நானோ பிராமமணன். அவனைத் தடுத்தால் கொன்றுவிடுவான். எனவே மௌனமாய் இருந்தேன்.' 'நீர் அவனை சபித்துவிடுவது தானே!' என்றார் பரசுராமர். 'இந்த அற்ப விஷயத்திற்காக அவனை சபிக்க இஷ்டமில்லை' என்றார். "ஒரு பிராமமணனுக்கு க்ஷததிரியன் மாடு தானம் செய்ய வேணடியிருக்க பிராமணனிடமிருந்து க்ஷத்திரியன் திருடிக்கொண்டு போனால் இதை பொறுக்கமாட்டேன். அநீதியை பொறுத்துப்போகக் கூடாது. அவ்வப்போது கண்டித்து விட வேணடும். நான் போய் காமதேனுவை மீட்டு வருவேன்" என்று சொல்லிப்போனார் தனையன்.

கார்த்தவீர்யார்ஜுனனைப் பார்த்து அடக்கமாய் பசுவைத் திருப்பித் தரும்படி கேட்டார். அவனோ பரசுராமனை கேலி செய்து, மாட்டையும் தரமுடியாது என்றான். உடனே பரசுராமன் கோபம் அடைநதார். பகவானின் அவதாரம் இல்லையா? அவர் ஒரு கோடாலியை வைத்துக்கொண்டே யுததம் செய்து அவனுடைய முப்பத்திரண்டு அக்ஷௌஹினி சேனையையும்வெட்டி வீழ்த்திவிட்டார். பிறகு கார்த்தவீர்யார்ஜுனன் தன் ஐநூறு கைகளால் ஐநூறு வில் ஏந்தி ஐநூறு கைகளால் அம்பு தொடுத்து ஆச்சர்யமான யுத்தம்செய்தான். பரசுராமரோபாய்ந்து

# விண்ணப்பம்

'ஸப்தகிரி' மாத இதழுக்கான தொகையை 'மணியார்டர்' மூல மாக அனுப்புதல் பயனுள்ளதாக அமையும். மணியார்டர் கூப்பனில் தங்கள் முகவரியினை ஆங்கிலத்தில்எழுதுவதும், பழைய சந்தாதாரராக இருந்தால் தங்கள் சரியான சந்தா எண்ணை மறக்காமல் குறிப்பதுவும் 'ஸப்தகிரி' நிருவாகப்பணியினை எளிதாக அமைக்கும். தொகை அனுப்பியும் இதழ் பெறாதவர்கள், தாங்கள் எழுதும் புகார்க் கடிதத்தில் மணியார்டர் எண்,செய்த தொகை, அனுப்பியதேதி ஆகிய விவரங்களுடன் தங்கள் முழு முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொண்டால் விரைவில செயலாற்ற உதவும். சந்தாதாரர்களின முழு ஒத்துழைப்பையும் எதிர்பார்க்கிறோம்.

— ஆசிரியர்.

பாய்ந்து அவனுடைய ஆயிரம கைகளையும் வெட்டி வீழ்த்திப்பிறகு அவனையும் கொன்றுவிட்டார். பரசுராமனின் பல பராக்ரமத்தைக கண்டு கார்த்தவீர்யார்ஜுனன் பிள்ளைகள் பயந்து ஓடிவிட்டனர். பிறகு பரசுராமர் காமதேனுவை மீட்டுக் கொண்டு திரும்பிவந்து தந்தையிடம் நடந்ததைச் சொன்னார்.

பரசுராமரின் இத்தகைய வீரச் செயலைக் கண்டு ஜமதக்னி முனிவர் சந்தோஷப்படவில்லை. ''நாம் பிராம்மணர்கள். பொறுமையுடன் தான் இருக்கவேணடும். அரசனைக் கொன்றதால்வீரஹத்தி என்றபாபம் உனக்கு வந்துவிட்டது, எனவே நீ தீர்த்தயாத்திரைச் செய்து அதைப் போக்கிக் கொண்டுவா'' என்று கூறிஅனுப்பிவிட்டார். பரசுராமன் பகவானேயானாலும் தர்மத்தைநடத்திக்காட்ட வேண்டுமென்று தந்தை சொற்படி தீர்த்த யாத்திரை செய்து முடித்து வந்தார். பரசுராமனின் தாயார் ரேணுகாதேவி. அவர் மஹா பதிவிரதை. தினமும் ரேவா நதியில் தீர்த்தமாடி வேகாத புதிய மண குடம்செய்து அதில் தண்ணீர் எடுத்து வருவாளாம். அந்தக் குடம் கரைந்து போகாமல் தண்ணீரைத் தாங்கி இருக்குமாம். இது அவளுடைய கற பின் சித்தியாகும். காட்டில் குயவர்கள் இல்லை. எனவே வெந்த பானை கிடைக்காது. எனவேஇப்படிச்செய்து வந்தாளாம். ஒரு நாள் ரேவா நதியில் தண்ணீர் எடுக்க சென்றபோது சித்ரரதன் என்ற கந்நர்வன் தன் வனிதைகளுடன் ஜலக்கீரீடை செய்து கொணடிருந்தான். அதை இவள் சற்று நேரம் வேடிக்கை பார்த்துக் கொண்டு இருந்துவிட்டாள். பிறகு தண்ணீர் எடுத்ததும் வேகாத மண பானையில் ஜலம் நிற்கவில்லை. இவள் கற்புக்கரசிதான்- ஆனால் நாணம் கொஞ்சம் குறைந்து தான் போய்விட்டது. வெறும் கையுடன் திரும்பிவந்த ரேணுகா தேவியை பார்த்து ஜமதக்னி கோபம் அடைந்துவிட்டார். தன் பிள்ளைகளைப் பாரத்து ''இவளைக்கொன்று போடுங்கள்'' என்றார். ஆனால் பிள்ளைகள் 'இது முறையாகாது. இவள் ஏதும விபசாரம் செயயவில்லை. உத்தமியாயிற்றே. மேலும் நமது தாய் ஆயிற்றே. இவளை எப்படிக் கொல்வது? மங்கலயம் இவளுக்கு அமையவில்லையானால் இவளுடைய தவம் குறைநதுவிட்டது. தவம் குறைந்துவிட்டதே தவிர நடத்தையில் பிசகு இல்லையே. இதற்கு, இவ்வளவு பெரிய தண்டனையா? என்று நினைத்து மறுத்துவிட்டனர். கடைசி பிள்ளையான பரசுராமனைப் பார்த்து ரேணுகாவைக் கொல்லும்படி உத்தரவிட்டார் அப்பாவின் மஹிமை அறிந்தபரசுராமன் கொஞ்சமேனும் கூசாமல் ரேணுகாதேவியை கோடாலியால் வெட்டி வீழ்த்தினார். உடனே ஜமதக்னி மகிழ்ச்சிஅடைந்து, 'நீயே என் உத்தம புத்திரன், ராம! உனக்கு என்ன வரம் வேண்டும்?' என்றார். ''தந்தையே என் தாயாரான ரேணுகாதேவி உயிர் பெற்று முன்போலவே எழுந்திருக்க வேண்டும். நீரும் அவளிடம் முன் போலவே பிரியமாக இருக்க வேண்டும். அம்மாவிற்கும் என்மேல் வெட்டிவிட்டேன் என்று வெறுப்பு இருக்க கூடாது'' என்றார். முனிவர் அப்படியே ஆகுக! என்று சொல்லவும் ரேணுகாதேவி தூங்கி எழுந்தது போல் எழுந்து முன்போலவே பதி சேவை செய்து கொண்டிருந்தாள்.

கார்த்தவீர்யார்ஜுனனின் பிள்ளைகள் பரசுராமனைப் பழிக்குப் பழி வாங்க திட்டமிட்டனர். தன் தந்தையைக் கொன்றதற்காக பரசுராமனின் தந்தையைக் கொன்றுவிட தீர்மானித்தனர். பரசுராமனிடம் அவர்களுக்குப் பயம். பரசுராமன் காட்டில் தர்ப்பை கொண்டுவர போயிருக்கையில் அக்னிஹோத்ரசாலையில்புகுந்து ஜமதக்னி முனிவரின் தலையை வெட்டிவிட்டனர். ரேணுகாதேவி தடுத்தும் அவர்கள் கேட்கவில்லை. 'ராம! ராம!' என்று ரேணுகாதேவி அலறும் சப்தம் கேட்டு பரசுராமன் ஓடி வந்தான். அதற்குள் அந்த பாவிகள் ஓடிவிட்டனர். பரசுராமன் தன் தநதை நிரபராதியாக இருந்து தலை வேறு உடல் வேறாக கிடப்பதைக் கண்டார். மிகவும் கோபம் கொண்டார். இப்படி க்ஷத்திரியர்கள் மக்களை ஹிம்சிப்பதைக் கண்டு பரசுராமர் க்ஷத்திரிய குலத்தையே வெறுத்தார். க்ஷத்திரியர்களை ஒழித்துக் கட்டுவேன் என்று பிரதிக்ஞை செய்தார். தந்தையின் சரீரத்தை தைலக்

கொப்பரையில் காப்பாற்றி வைக்கும் படி தாயாரிடம் சொல்லிவிட்டு வெளியேறினார். மூவேழு இருபத்தோரு தலைமுறை க்ஷத்திரியர்களை கண்ட இடத்தில் வெட்டித் தள்ளினார். தசரதன், ஜனகன் முதலிய தார்மீகர்களான க்ஷத்திரியர்களை மட்டும் மிச்சம் வைததார். திரும்பி வந்த தன் தந்தையை பிழைக்கச் செய்துவிட்டார். பகவான் இல்லையா பரசுராமர்! அவரால் ஆகாதது என்னதான் இருக்கிறது. ஜமதக்னி இன்று சப்தரிஷிகளில் ஒருவராக பூஜிக்கப்படுகிறார். ரேணுகா தேவி கிராமதேவதையாக (மாரியம்மன்) பூஜிக்கப்படுகிறார்.

பரசுராமன் குருக்ஷேத்திரத்தில் ஸமந்த பஞ்சகம என்ற தீர்த்தத்தை ஏற்படுத்தினார். வீரஹத்தி முதலிய பாபங்கள் எல்லாம் அந்த தீர்த்தத்தில் நீராடினால் நீங்கிவிடும் என்றார். பிறகு ஒரு பெரிய யாகம் நடத்தித் தான் ஜெயித்த பூமி முழுவதையும் கச்யபருக்கு தானம் செய்தார். பிறகு சீதா கல்யாணம் செய்து கொண்டு வரும் தசரத ராமனையும் கண்டு அவருடைய பராக்ரமத்தை பரிக்ஷை செய்வதுபோல் விளையாடினார், அவரால் பங்கப்படுவதுபோல், தான் தசரதராமனின் பெருமையை உலகுக்குக் காட்டினார். பிறகுதான் அடங்கிப்போய் இன்றும் மஹேந்திர பர்வதத்தில் தவம் செய்து கொண்டிருக்கிறார். மஹாபாரத யுத்தத்திற்கு அடிகோலியவரும் இவர்தான். ஏனெனில் கௌரவாகள், பாண்டவர் யாவரும துரோணரிடமே வில்வித்தை கற்றனர். அந்த துரோணர், பரசுராமனின் சிஷ்யர். பரசுராமர் அநீதியை பொறுககமாட்டார். பொறுத்துபபோகும பிராமணனுககும் ஆறறல் வேணடும் என்ற ஒரு சீர்திருத்தத்தைக் காட்டியவர் பரசுராமர். இதனால் பிறர் சொத்தை பறிமுதல் செய்யக்கூடாது எனறும், அநீதி செய்யும் குலம் அழிந்துபோகும் என்றும், அரசனிடம் நீதி இல்லாவிடில் மக்களே நீதியை காக்கவேண்டும் என்றும், ஆத்மபலம படையினா பலத்தைவிட பெரியது என்றும் தெரிகிறது. ✻

(16-ம் பக்கத் தொடர்ச்சி)

அவன் விசித்திரவீரியனின் மனைவி அம்பாலிகையினுடைய வேலைக்காரியின் வயிற்றில் பிறந்தான். பிறந்த இடத்தை முன்னிட்டு துரியோதனாதியர்களால் அலட்சியப்படுத்தப்படும் பொழுதும் கூட, அவன் தன் உள்ளத்தில் தோன்றிய தர்ம நெறிகளை எடுத்துக் கூறுவதில் தயக்கம் காட்டாமலிருந்தான்.

அசத்தியம், அகங்காரம், அதர்மம், பொறாமை, கபடம் ஆகிய தீய குணங்களின் கூட்டுக் கலவையே துரியோதனனுடைய உள்ளம். பலகாரங்களின் சுவையினை அவற்றில் மிதந்து கொண்டிருக்கும் கரண்டியால் உணர முடியாது. அதனைப்போல் பீஷ்மர், துரோணர் ஆகியோருடைய அற நெறிகளை எந்நேரமும் கேட்டுக் கொண்டிருந்த துரியோதனனுடைய உள்ளம் அவற்றின் பயன்களை உணர முடியாமலிருந்தது. அத்தகைய கொடூரமான உள்ளத்திலும் நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்க நெறிகளைக் கூறுவதில் விதுரன் மனத்தளர்வு அடையவில்லை. அதர்மத்தைக் கண்டிப்பதுதானே தருமத்தைப் பேணும் முறையாகும்.

நட்பு பயனுள்ளதாக, நண்பர்களுக்குப் பாதுகாப்பாக இருப்பதுதான் முதல்தரமான நட்பின் இலக்கணமாகும்.

'தன்னைச் சார்ந்தவர்கள் வரம்பு மீறி நடக்க ஆரம்பித்தால், ஒழுக்கத்திலிருந்து நழுவிச் செயல்பட முயன்றால், அச்செயல் ஆரம்பமாகுமுன் நண்பர்கள் முந்திக்கொண்டு கடுமையான சொற்களைக்கூறி அவர்களைத் திருத்த வேண்டும்' என்று கூறுகிறார் வள்ளுவர்.

'மிகுதிக் கண் மேற் சென்று இடித்தற் பொருட்டு', என்ற வள்ளுவன் வாக்கினைக் கடைப்பிடித்து வாழ்ந்தவன் விதுரன்.

தேனெடுப்பவன் மலைச் சரிவைப் பார்க்காமல் கீழே விழுந்து மடிவதைப்போல் அறவழியினை உணராது அதர்ம வழி என்ற மலைச்சரிவைப் பார்க்காமல் திட்டம் தீட்டிக் கீழே விழப்போகும் துரியோதனாதியர்களின் செயலை அவ்வப்போது கடுமையான சொற்களைக் கூறி திருத்த முயன்றான் விதுரன.

பொறுமை, தர்மம், சத்தியம் சுவர்க்கத்தின் வாயில்கள். அவை ஆன்ம வளர்ச்சிக்குக் காரணங்களாகும்.

காமம், குரோதம், உலோபம், நரகத்தின் வாயில்கள். அவை ஆன்ம நாசத்திற்குக் காரணங்களாகும்.

உடலிலேற்படும் நோயை மருந்து மூலம் போக்குவதுபோல், உடற்பற்றால் உள்ளத்திலேற்படும் 'அறியாமை', என்ற நோயை ஞானத்தின் மூலம் போக்கவேண்டும் என்று திருதராட்டினனுக்கு நீதி பல கூறினான். அவற்றில் சிலவற்றைப் பார்ப்போம்.

புத்தி தனலாபத்திற்குக் காரணமன்று. புத்தியின்மை செழிப்பின்மைக்குக் காரணமன்று.

தான் குற்றவாளியாக இருந்து கொண்டு, தனக்கு அடங்கியிருக்கும் மனிதனைக் கோபம் வரச் செய்பவன் ஸர்ப்பமுள்ள வீட்டில் வசிப்பவன் போல் இரவில் சுகமாகத் தூங்குவதில்லை.

சுகத்தை விரும்புகிறவன் வித்தையை விட வேண்டும். வித்தையை விரும்புகிறவன் சுகத்தை விட வேண்டும்.

கோபியாமலிருந்தே கோபத்தை வெல்ல வேணடும். லோபியைத் தானத்தால் வெல்ல வேண்டும். தீயவனை நல்லொழுக்கத்தால் வெல்ல வேண்டும். பொய்யை ஸத்தியத்தால் வெல்ல வேண்டும்.

கணணால் கை கால்களைக் காக்க வேணடும். மனத்தால் கண் காதுகளைக் காக்க வேண்டும். காமா வினால் மனத்தையும் வாக்கையும் காக்கவேண்டும்.

பிறருடைய நிந்தையில் பற்றுள்ளவர்களை விட்டுவிட வேண்டும். பிறருக்குத் துக்கத்தை உண்டுபண்ண முயலபவர்களையும் விட்டுவிட வேண்டும்.

சக்தியற்றவன் எல்லாவற்றையும பொறுக்க வேண்டும். சக்தியுள்ளவன தர்மம் காரணமாகப் பொறுக்க வேண்டும்.

செய்கை, மனம், வாக்கு இவற்றால் அடிக்கடி எதைப் பற்றுகிறானோ அதுவே அவனைக் கவர்கிறது. ஆகையால் நல்ல காரியத்தைச் செய்ய வேண்டும்.

சாதனைகள் புரிவதற்காகப் பிறந்தவன் மனிதன். எந்தச் சாதனைக்கும் ஆணிவேர் உயர்ந்த சிந்தனைதான். அந்த ஆணிவேரை உறுதியாக வளர்க்கும் ஊட்டச் சத்துக்களே, மகாபாரதத்தில் விதுரன் கூறிய நீதிகளாகும்.

இருள் பரவுவதைப்போல் மக்கள் மனதில் மூடியுள்ள எணண மேகங்களைக் கலைக்கும் காற்று-விதுர நீதிகள். பொங்கும் நீருற்றுப்போல மானுட உணர்ச்சிகளை இனிமையாகப் பொங்கவைக்கும் விதுர நீதிகளைக் கற்போம்; சிந்திப்போம்; கடைப்பிடிக்க முயல்வோம். ★

# ரிக்வேத விஷயங்கள்

திரு. பி. சுந்தரராமன், எம் ஏ.பி.எட்.,
பழமார்னேரி.

அஹம் பிரம்மாஸ்மி என்ற உண்மையை அறிவிப்பது ரிக்வேதம். பல ரிக்குகள் அடங்கியதால் ரிக்வேதம் என்பர். இதனை அஷ்டகம் அல்லது மண்டலம், அத்தியாயம், அனுவாகம், வர்க்கம், ஸூக்தங்கள் எனப்பிரித்துள்ளனர். ரிக்வேதத்தில் எட்டு அஷ்டகம் அல்லது பத்து மண்டலம், 64 அத்தியாயம், 85 அனுவாகம், 1017 ஸூக்தம், 2024 வர்க்கம், 10467 ரிக்குகள் உண்டு.

வியாஸ பகவான் நான்கு வேதங்களை பைலர், வைசம்பாயனர், ஜைமினி, சுமந்தன ஆகியோருக்கு முறையே கற்பித்தார். பைலர் ரிக்வேதத்தை இந்திர பிரமிதனுக்கும், பாஷ்கலனுக்கும் அறிவித்தார். பாஷ்கலன் அதை நான்காய்ப் பிரித்து வாத்யன், யாக்ஞ வல்கியன, பராசரன், அக்னி மித்திரனுக்கு அறிவித்தார். இந்திரப் பிரமிதன் மாண்டுக்யனுக்கு அறிவித்தார். மாண்டுக்யனின் சீடர்களான தேவமித்திரன, ஸௌபர்யாதி போன்ஞேரும் இதைக் கற்றனர். மாண்டுக்யனின் மகனான சாகல்யன் ரிக்வேதத்தை ஐந்தாய் வகுத்து வத்ஸன், முத்கரன், சால்யன், கோகல்யன், சிசிரன் என்னும் ஐந்து சீடர்கட்கு அறிவித்தான். இவர்கட்குப் பிறகு ஜாத கர்ணன், பலாகன், ஜாபாலன், விரஜன், பாஷ்கலன போன்ற சீடர்கள் வழியாக ரிக்வேதம் பூவுலகமெங்கும் தழைத்துப் பரவிற்று.

இவ்விதம் வேதத்தைக் கற்ற இவர்கள் உலகமெங்கும் பரவி இதை உபதேசிக்கும்போது காலம், இடம், நிலைகளுக்கேற்றவாறு சில பாட பேதங்கள் ஏற்பட்டன. கருத்து ஒன்றே. ஆனால் சொல்லும் முறை வெவ்வேறு. இத்தகைய பேதங்களே சாகைகள் (பிரிவினை) எனப்பட்டன.

ரிக்வேதத்திற்கு 21 சாகைகள் இருந்தன. ஆனால்தற்போது சோகைகளையே காணலாம். அவை சாகலம், பாஷ்கலம், ஆசுவலாயனம், சாங்காயனம், ஐதரேயம், மாண்டுகாயனம் என்பனவாகும். தற்போது ஆசுவலாயனமென்ற சாகையே அதிகம் காணப்படுகிறது. ஆசுவலாயன சாகைக்காரர்கள் தாங்கள் சொல்லும் ஸம்ஹிதை எது என்பதை மறந்து சாகல ஸம்ஹிதையை அனுஷ்டிக்கிறார்கள் என்பது ஒரு சாரார் கூற்று.

ரிக்வேதத்திற்குரிய பிராம்மணங்கள் இரண்டு அவை ஐதரேயம், கௌஷீதகம் என்பனவாகும். ரிக்வேதத்திற்குரிய உபநிஷதங்கள் ஸம்ஹிதம், ஐதரேயம், பலாவிருதம், பிராமணோபனிஷதம் கௌஷீதகம் என்பனவாகும். ரிக்வேத சூத்திரங்கள் இரண்டாகும். அவை ஆசுவலாயன கல்ப சிரௌதம், ஸாங்க்யாயன சிரௌதம் என்பன. ரிக்வேத அரண்யகங்கள் இரண்டு அவை ஐதரேய ஆரண்யகம், கௌஷீதக ஆரண்யகம் ரிக்வேதத்திற்கு மொத்தம் 21 உபநிஷதங்கள் உண்டு. ரிக்வேதத்தின் உபவேதம் ஆயுர்வேதமாகும்.

ரிக்வேதத்திற்கு உரை செய்த பாஷ்யகாரர்கள் கௌத்ஸர், சாகபூர்ணி, யாஸ்கர், ஔதார்ண நாபர். சாயனர், பட்ட பாஸ்கரர், ஆனநத தீர்த்தர், சண்டு பண்டிதன், உத்பட்டன் என்போராவர்.

மாகஸ் முல்லர் ஈஸ்ட் இண்டியா கம்பெனியின் உதவியால் வேதங்களை அழகாக அச்சடித்தார். தியோடர் ஆப்ரெக்ட் என்பவர் ரிக்வேதத்தை ஜெர்மனியில் ஆங்கில மொழியில் பிரசுரம் செய்தார். 1859ல் வில்ஸன் ரிக்வேத ஆங்கில உரையைப் பிரசுரம் செய்தார். 1877ல் கிராஸ்மன் என்பவரும் 1888ல் லுட்விக் என்பவரும் ஜெர்மன் மொழியில் ரிக்வேதத்தை வெளியிட்டனர். 1899ல் கிரிஃப்பித் ஆங்கில உரை ரிக்வேதம் முதலிய மற்றையவேதங்கட்குச்செய்தார். பிறகு ஓல்டன் பர்க் என்பவர் ரிக்வேதத்தின் தத்துவ விளக்கம் என்ற நூலை எழுதினார். லாங்லோயி, அட்ரெக்னி போன்றோர் பிரெஞ்சு மொழி பெயர்ப்புகளை வெளியிட்டனர். கிராஸ்மன் ஜெர்மனியில ஆராய்ச்சி நூலொன்று எழுதினார். இவ்விதம் ஐரோப்பியர்கள் ரிக்வேதத்திற்கு செய்த பணி மகத்தானது.

ரிக்வேதத்தில் உள்ள ஐதரேயம் என்னும் சாகையினையே மலையாள நம்பூதிரிகள் பௌழியம் என்று கூறுவர். ரிக்வேதத்தின் பெருமை ஆழ்வார்களால் பேசப்படுகிறது. பெரியாழ்வார் 'இருக்கொடு நீர் சங்கில் கொண்டிட்டு எழில் மறையோர் வந்து நின்றார்'. (பெரியாழ்வார்திருமொழி 2-8-9) என்றும், 'இருக்கு யஜுர் சாமவேத நாண்மலர் கொண்டு உன் பாதம் நண்ணு நாள்...பட்டினி நாளே' (பெரியாழ்வார் திருமொழி 5-1-6) என்றும்கூறுவார், திருமங்கையாழ்வார் 'இருக்குறு மந்தணர் சந்நிதியின் வாய் பெருக்கமொடு அமரர்கள் அமர நல்கும் இருக்கினில் இன்னிசை யானவன்' (பெரிய திருமொழி 6-1-7) என்றும், 'இருக்கிலங்கு திருமொழி வாய் எண்டோளீசர் (பெரிய திருமொழி 6-6-8) என்றும் கூறுவார்.

வேதத்தை ஆதாரமாகக் கொண்ட நமது வைதிக சமயம் உலகம் முழுவதும் இருந்ததாகப் பாகவதம் முதலிய பெரு நூல்கள் மூலம் அறியக் கிடக்கிறது. ரிக்வேதத்தில் கூறப்படும் மித்ரா வருணர் வழிபாடு பர்ஸியா, விடியா, ரோம் சாம்ராஜ்யங்களில் பரவி இருந்ததாக Rigvedic India என்ற புத்தகத்தில் (Page 94) அபினஸ் சந்திரதாஸ் என்ற அறிஞர் கூறுவார். ஆஸ்திரேலியாவை ஒட்டிய பலி (Bali) எனும் தீவில் ரிக்வேத மந்திரங்கள் மூலம் சிவ வழிபாடு இன்னும் நடைபெற்று வருகிறது. எந்நாட்டவரும் போற்றும் வேதத்தை நம் நாட்டவர் உணர்ந்து போற்றிப் பேண வேண்டும்.



# திருமலையில் தங்கு வசதிகளுக்கான நன்கொடைத் திட்டம்

கலியுக வைகுண்டமெனக் கருதப்படும் திருமலையில் நிறைவண்ணம் அருள புரியும் வேங்கட வணைக காண நாட்டின் பல முனைகளிலிருந்து ஆயிரக்கணக்கான யாத்திரிகர்கள் திருமலைக்கு நாள்தோறும் வருகை புரிகின்றனர். அவர்கள் திருமலையில் தங்குவதறகென்று திருமலை திருப்பதி தேவஸ்தானம் பல தர்ம சத்திரங்களையும், குடில்கள், விருந்தினர் விடுதிகள் போன்ற பல தங்கு வசதி கட்டிடங்களையும் கட்டியுள்ளது. வருகை புரியும் யாத்திரிகர்களின் எண்ணிக்கை நாளுககு நாள் பெருகி வருவதை மனதிற்கொண்டு மேலும் தற்போது உள்ள விருந்தினர் விடுதி, குடிலகளின் மேல் பொதுமக்களின் நன் கொடைத் திட்டத்தின் கீழ் மற்றுமொரு தளத்தினைக் கட்டுவதென்று மேலாண்மை முடிவெடுத்துள்ளது. யாத்திரிகர்/பக்தர்களுககுத் தொண்டு புரிந்திடும் ஓர் அரிய வாய்ப்பாக இரக்கமனமிக்க பொதுமக்கள் அல்லது தனியார் நிறுவனம் அல்லது அறக்குழு ஆகியன இத்திட்டத்தினைப் பயன்படுத்திக்கொள்ளும் என நம்புகிறோம்.

## முதல தளம் :

ஆழ்வார் ஏரி, மங்களபாவி, சங்குமிட்டா, சேஷாத்ரிநகா, அஞ்சநாத்ரி, கருடாத்ரிநகர் ஆகிய காட்டேஜ்களின் ஏ மற்றும் பி பகுதிகளின் மேல்கட்டப்பட்டு வரும் 'சி' மற்றும் 'டி' பகுதிகள். 872 முதல் 1012 சதுர அடி பரப்புள்ளதாக இப்பகுதிகள் அமையும். இவ்வொரு பகுதிக்கும் வழங்கவேண்டிய நன் கொடைத் தொகை ரூ. 1. 50 இலட்சமாகும்.

## ராம் பகீச்சா விருந்தினர் விடுதிகள் :

ஒவ்வொரு தளத்திலும் 50 அறைத்தொகுதிகள் வீதம் மூனறு தளங்களைக்கொண்ட மூன்று விருந் தினர் விடுதிகள் கட்டப்பட்டு வருகின்றன. இவற்றில் 166 அறைத்தொகுதிகள் நன்கொடையாளர் களுக்கு ஒதுக்கப்பட்டுவிட்டன. 44.5 சதுர மீட்டர் பரப்புள்ள இவ்அறைத்தொகுதிக்கான நன்கொடை தொகை ரூ. 60,000 ஆகும்.

## ஸப்தகிரி சத்திரங்கள :

இச்சத்திரக்கட்டிடம் 9 தொகுதியினைக் கொண்ட 954 அறைகளுடன் விளங்கும். இவற்றில் 943 அறைகள் நன்கொடைத் திட்டத்தின் கீழ் ஒதுக்கப்படும். 1 × 12'4' அளவில் இவ்வறைகள் விளங்கும். இவஅறைக்கான நன்கொடைத் தொகை ரூ. 40,000 ஆகும்.

## 2-வது விருந்தினர் விடுதி :

சேஷாத்ரி நகரில் இரண்டாவது விருந்தினர் விடுதியில் உள்ள இரண்டு தளங்களில் கட்டப்பட் டுள்ள 26 அறைத் தொகுதிகள் நன்கொடைத் திட்டத்தின்கீழ் ஒதுக்கப்படும். 4.20 மீ × 4.20 மீ பரப்ப ளவில் இவ்வறைத் தொகுதிகள் விளங்கும். இவ் இரண்டாவது விருந்தினர் விடுதிக் கட்டிடத்திற்காக வோ அல்லது தளம் முழுமைக்கோ நனகொடை பெற மேலாண்மை விழைகின்றது. விடுதி கட்டிடத்திற் கான நன்கொடைத் தொகை ரூ. 25 இலட்சமாகும்.

மேற்கூறிய இத்தங்கு வசதி கட்டிடஙகளுக்கான நன்கொடையினை தனிநபர்/தனியார் நிறுவனம் அறக்கட்டளை போன்ற எந்தப் பெயரிலும் வழங்கலாம.

## சலுகைகள்

நன்கொடையாளர் அல்லது அவர் உறவினர்கள் அல்லது நிறுவனததின் அல்லது அறககட்டளை யைச சார்ந்த உறுப்பினர்களோ அல்லது அவறறின் அலுவலர்களோ வருடததில 60 நாட்களுககு, (ஒரு முறை தங்கிடும்போது 10 நாட்களுக்கு மிகாமல்) இலவசமாக அவாகள் நன்கொடை அளித்த தஙகு வசதி களில் தங்கலாம். அவர்கள் நன்கொடை வழங்காத தங்கு வசதிகளில் தங்க நேரிடின், வித்யாசப்படும் வாடகைத்தொகை மட்டுமே அவர்களிடமிருந்து வசூலிக்கப்படும்.

நன்கொடையாளர்களின் பெயர், முகவரி கொண்ட கற்பலகை ஒன்று முதல் தளம்/அறைத் தொகுதி/அறை ஆகியவற்றில் தகுந்த இடத்தில் பொருத்தப்படும். முழு விவரங்களுக்கு:

Executive Officer, T. T. Devasthanams, Tirupati - (A. P.) 517507. எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

**தரும் பொருள் சிறியதே : பெறும் அருள் பெரிதே:**

12-ஆம பக்கத் தொடர்ச்சி)

ான்று கமபன கணட இராமனின பெருமையை எல்லாம் எடுத்துக் கூறி அவன புகழை கேட்காத செவி செவியே அல்ல' என்று பறைசாற்று கிறார்.

இதிலிருந்து கம்பராமாயணம் ஒன்று சிலப்பதிகாரத்திற்கு முநதிய தாக இருக்க வேண்டும் அல்லது சம காலமாக இருக்க வேணடும் என்பது அறிஞாகளின கருத்தாகும்.

**கம்பரின் சிறப்பு :**

கம்பர் தன் காவியத்தில் எநத இடத்தில் அவச்சொல்லையும், துன்ப மொழிகளையும் எடுத்து கையாள வில்லை. அவ்வாறு எந்த இடத்திலும் வரக் கூடாது என்பதில் கம்பர் கண் ணும் கருத்துமாக இருந்தார். உதா ரணமாக இராமனின் மூடி சூட்டு விழாவின் போது கூடிய கூட்டத் தாரைப் பார்த்துச் சாதாரணமாக எள் போட்டால் எள் விளையும் என்று அனைவரும் கூறும் முகமாக கூறிச் சென்று இருக்கலாம். ஆனால் கம்பரோ,

"உளுந்து போட்டால் உளுந்து
விளையும்"

என்று குறிக்கிறாா. காரணம் எள் என்பது கரும காரியத்திற்கு மட்டும் பயன்படக் கூடியது என்பதை மன தில் கொண்டு உளுந்து போட்டால் உளுந்து விளையும என்று மாற்றிப் பாடி ஒரு சொல்மரபு புரட்சியே செய்துள்ளார்.

மேலும இராமனகாட்டிற்குச்செல் லும் காட்சியை விளக்க வார்த் தைகள் இல்லை என்று ஐயோ என ஒரேஒரு அமங்கல சொல்லை மட்டும் பயன்படுத்துகிறார். இராமன் அயோத்தியை விட்டு கானகம் புகும் போது நகரமே இராமனுடன் சென் றது என்பதை குறிப்பால் உணர்த்த நம் செஞ்சொற்கவிஞன் பைந்தமிழ் நேர்ப்பாகல் கமபர், "நகர் நீங்கு படலம்" எனறு ஒரு படலத்திற்கு பெயரிட்டு நமமை வியப்பில ஆழ்த்துகிறார்.

தன் கணவன் இறந்தால் அவன் இறக்ககாரணமானவனைக்கணவனை இழநதவள் தூறறுவது மரபு. ஆனால் கம்பராமாயணத்தில இராவணன் இறநதவுடன மணடோதரி புலமபு கிறாள். அப்போது 'இனிமையான மனம உடைய மலர்களில் உளள தேனை அடைய வணடுகள் சுறறி சுற்றி வரும். அப்படிப்பட்ட மலர் களை அணிந்த சீதையின் மேல் வைத்த அன்பு தான் அம்பாக வந்து உன உயிரைக் கவாநததோ' எனறு புலம்புகிறாள்.

"கள்ளிருக்கும் மலர்க் கூந்தல்
சானகியைக் கரநத காதல
உள்ளிருக்கும எனத் தடவி
ஊடுருவியதோ ஒருவன் வாளி"

எனறு புலம்புவதாகக கூறுகிறார்.

கம்பன தன் வருணனையில் கோசல நாட்டையும் அதன் தலைநகரான அயோத்தியையும் வருணனை செய் யும் போது அங்குக் கொள்வார் இல் லாமையால் கொடுப்பாரும் இல்லை என்று கூறுகிறார். இது அனைவரும் சமமாக ஏற்றத் தாழ்வு இன்றி வாழ்நதார்கள என்பதறகு உதார ணம் ஆகும்.

"கலலாது நிற்பார் பிறர் இனமையின,
கலவி முற்ற
வலலார் இல்லை; சுவை வலலார்
அல்லாரும் இல்லை,
எலலாரும எலலாப் பெருஞ் செலவ
மும் எய்தலாலே
இல்லாரும் இலலை; உடையாாகளும்
இல்லை மாதோ'

எனறு ஒரு எதிர்கால சமுதாயத்தை வளமான சமுதாயத்தைக் கம்பர் காண்கிறார்.

கம்பர் தனனை ஆதரிதத வள்ள லான சடையப்பரை ஆயிரம் பாடல் களுக்கு ஒருமுறை வாழ்த்திஉள்ளார். இது அவரின் நன்றி மறவாமை தன் மையைக் காட்டுகிறது.

**கமபன காடடும் சோக காட்சி :**

கம்ப இராமாயணத்தில் சோக காட்சிக்கு மட்டும பஞ்சமே இல்லை. காரணம் சோகத்தின் திருவுருவம் பரதன். அவன் படும் சோகம் ஏரா ளம். மேலும் இராமன் காடு செல் லும் போது ஆடு அழுதது, மாடு அழுதது, அவன் அழுதான, இவன் அழுதான என்று சாதாரணமாக கூறாமல ஒரு படி மேலே சென்று,

"உரு அறியாப் பிள்ளை அழுத"...
(நகர் நீங்குபடலம்—96)

என்கிறார். இதில் உருத் தெரியாத கருவில் உள்ள சதைப் பிணடமும் அழுதது என்று சோகத்தின் எல் லைக்கே தம்மை கொண்டு சென்று நம்மையும் மீளாத் துயரத்தில் ஆழ்த்துகிறார்.

**புதிய கருத்துக்கள் :**

கம்பன் தன் காவியத்தில் கோசல நாட்டின் நீர்ச் சுனைகளில் திமிங் கலத்தை விழுங்கும் திமிங்கலக் கிழங் கள் என்னும் பெரிய மிருகம் இருந் தன என்று சுட்டிக்காட்டுகிறார்.

மேலும் கம்பர் தன் ஒவ்வொரு காண்டத்திற்கும் அதற்கு தகுந்தாற் போல் பெயா வைத்து நம்மை வியப் பில் ஆழ்த்துகிறாா. உதாரணமாக சுநதர காண்டத்தில உள்ள ஒவ வொரு வரியும் சிந்தனையாலும் சொற்புரட்சியாலும் அழகானது. எனவேதான அதற்கு சுந்தரகாண்டம் என்றுபெயர் வைத்தார்.

கம்பர் ஒரு போர்க்காலமிக்க மனி தாபிமானத்தை தன் காவியத்தில் உணர்த்தி உள்ளார். இராவணன வதை படலத்தில்,

"இனறு போய் போருக்கு நாளை வா'

எனஇராமன்கூறுவதாகக் கூறுகிறார். இராவணன் அனைததையும் இழந்து வெறும் ஆளாக நிற்கிறான் அவனைப் பார்த்து இராமன் இன்று போய் நாளை வா என்றும் தன் மனைவியை விட்டு விட்டால் இனிப் போரில்லை என்றும் கூறுகிறான். இதுவே போர்க் கால தர்மம் ஆகும்.

கணவனும் மனைவியும் இணைந்து வாழ்வதுதான் உண்மையான இல்லற மாகிய நல்லறம் ஆகும். இராமனும் இதற்கு உதாரணமாகத்தான் சீதை யுடன் வாழ்ந்து வந்தான். ஆனால் காட்டிற்குச்செல்லும்போதுசீதையை அவன் அழைத்து செல்ல விரும்ப வில்லை. கணவன் துயரத்தில் பங்கு கொள்ள விரும்புவது மனைவியின் இயல்பு. எனவே சீதை

"நின் பிரிவினும் சுடுமோ அப்பெருங்
காடே!"

என்று விளக்கி நம்மை உண்மையான அன்புக்கு பாத்திரமாகும்படி கம்பர் உள்ளாக்குகிறார்.

மேலும் இராவணன் முதல் நாள் போரில் தோற்று அனைத்து ஆயுதங் களையும் இழந்து குனிந்து கொண்டு வருகிறான். வரும்போது தன் எதிரில் உள்ள சேனையை பார்க்க வில்லை. தன் நகரத்தை பார்க்க வில்லை. பூமகளை பார்த்துக் கொண்ட தலை குனிந்து வந்தான் என்று பாடி நம்மையும் யுத்த களத் திற்குக் கொண்டு செல்கிறார் கம்பர்.

"......பூமகளை நோக்கி புக்கான்"
என்று பாடுகிறார்.

கம்பரின் காவிய மேன்மை என்றால் அது அவர் இறுதியில் இராமனுக்கு முடி சூட்டும் படலத்தில் குறிக்கும் கவிதைதான் ஆகும்.

அரியணை அனுமன் தாங்க அங்கதன்
உடைவாள்ஏந்தப்
பரதன் வெண்குடை கவிழ்க்க இரு
வரும் கவரி வீச

என்னும் பாடலில் கம்பர் தன் காவிய மேன்மையை விளக்குகிறார். இராமன் தன் நிழல் போல தொடர்ந்து வந்த தன் தம்பி இலக்கு வனிடம் உடை வாளை தராமல் தன் பகையாளி மகனான அங்கதன் கையில் தருகிறான். காரணம் பழி உணர்ச்சி இல்லாதவனிடம்தான் ஆயுதம் தர வேண்டும். எனவேதான் இராமன் அங்கதன் கையில் உடை வாளை தருகிறான்.

கம்பன் காட்டும் அன்பு :

ஒருவன் தன்னை நாடி வந்து பழகும் மனிதர்களை நண்பனாகக் கொள்வது உலக மரபு. மேலும் அவனை தன் சகோதரனாக மதித்து பழகுவது நடைமுறையில் காணப் படும் ஒன்று. இதைத்தான் நம் சங்க இலக்கியங்களும், புலவர் பெருமக் களும் நமக்கு உணர்த்திச் சென்றுள் ளார்கள். இதை இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே கனியன் பூங் குன்றனார் "யாதும் ஊரே யாவரும் கேளீர்" என்று பறை சாற்றினார்.

கம்பரும் தன் காவியத்தில் இராமனை ஒரு கருணைக் கடலாகத் தான் காட்டுகிறார். அவன் தன்னை நாடி வருபவர்களைத் தன் நண்பனாக ஏன் தன் உடன் பிறந்த தம்பியாக எண்ணிப் பழகுகிறான். ஒரு தாழ்ந்த சாதியில் பிறந்து வேட்டுவ தொழில் செய்யும் குகனையும், குரங்குக் குல கோமான் சுக்ரீவனைத் தன் தம்பி யாகவும், அரக்க குல செம்மலும் அறிவு சால் மன்னனுமாகிய வீட ணனைத் தம்பியாகவும் ஏற்று அனை வரும் சகோதரர்களாக வாழ வேண் டும் என்று வலியுறுத்துகிறார்.

குகனோடு ஐவர் ஆனோம், முன்பு
பின குன்று சூழ்வான்
மகனோடு அறுவர் ஆனாம் எம
முழை அன்பன் வந்த
அகன் அமர் காதல் ஐய! நின்னோடு
எழுவர் ஆனோம்.

(இலங்கேஸ்வர படலம் 143)

என்னும் பாடல் மூலம் குகனை ஐந்தாவது தம்பியாகவும் சுக்ரீவனை ஆறாவது தம்பியாகவும் வீடணனை தன் ஏழாவது தம்பியாகவும் சொல்லி ஒற்றுமையின் சிறப்பை நம் சமுதாயத் துக்கு எடுத்துக் காட்டுகிறார்.

"எல்லோரும் ஓர் குலம் எல்லோரும்
ஓரினம்"

என்னும் பழம் பெரும் பாடலின் கருத்து இங்கு எதிரொலிக்கப்படும் வகையில் பாடி இருப்பது நாளும் எண்ணி இன்புறத்தக்கது

முடிவுரை :

கம்பர் அனைத்து சமூகத்தினரும் வியக்கும் வண்ணம் பாரபட்ச தன்மை இன்றி, தன் கவிதைகள் மூலம் பாடி பார் புகழ் கொண்ட இந்த தமிழ் நாட்டிற்குப் பெருமை சேர்த்துள் ளார் என்பதை இக்கட்டுரை மூலம் நாம் நன்கு உணரலாம்.

மேலும் அவர் கூறிய சமுதாயக் கருத்துக்கள் அனைத்தையும் நம் வாழ்வில் கடைபிடித்து நம் சமுதா யம் சிறந்து, புதிய சமுதாயத்தை படைக்க இளைஞர் அணி திரண்டு செயல்படுவதாகுக!



ஸப்தகிரி

# ஸ்பர்சம்

திரு. ஸா. ஸ்ரீநிவாஸன்

புதுதில்லி.

'' உண்டு கேட்டுற்று மோந்து பார்க்கு
மைவவர்க்கே தொண்டுபடலாமோ
உன் தொண்டனேன்''

என்று நூற்றெட்டு திருப்பதி அந்தாதியில் பிள்ளைப்பெருமாளையங்கார் அருளியபடியே நமது பஞ்சேந்திரியங்கள் ரஸம், சப்தம், ஸ்பர்சம், கந்தம் ரூபம் என்ற விஷயங்களை அநுபவிக்கின்றன. இவற்றுள் ஸ்பர்சத்தைப் பற்றிய சில விஷயங்களை இங்குக் காண்போம்.

ஸ்பர்சம் என்பதற்கு தொடுதல், தீண்டுதல், தொடர்பு, உணர்ச்சி, சேர்க்கை முதலிய பல பொருள்கள் ஆங்காங்குக் காணப்படுகின்றன.

பாலன் த்ருவனைக் கபோலத்தில் பகவான் சங்கத்தினால் தொட்டதும் அவனுக்கு ஜ்ஞானமுண்டாகி அவன் எம்பெருமானைத் துதிக்க ஆரம்பித்தான். குழந்தை பரீக்ஷித் கரிக்கட்டையாக விழுந்ததும் அதை ஓர் உண்மை ப்ரஹ்மசாரி ஸ்பர்சித்தால் பிழைக்குமென்றனர். நைஷ்டிக ப்ரஹ்மசாரியான பீஷ்மர் உட்பட ஒருவரும் தைரியமாக முன்வராத போது ஷோடச ஸ்திரீ ஸஹஸ்ரேசனான கண்ணபிரான் தன் திருவடியால் தீண்ட அக்குழவி உயிர்பெற்றது.

விவாஹத்துக்குப் பாணிக்ரஹணம் (கையைப் பிடித்தல்) என்றே பெயர். அதேபோல் ஸப்தபதி (பெண்காலைப் பிடித்து வரன் ஏழடி நடத்தல்) ஆன பிறகே விவாஹம் பூர்த்தியாகிறது.

கோயில்களில் பகவந் மூர்த்தியை ப்ரதிஷ்டை செய்யும் போது பரிசுத்திக்காக சிறந்தபாகவதரைக் கொண்டு விக்ரஹத்தைத் தொடும்படி செய்வர். இதற்கு மஹா பாகவத ஸ்பர்சம் என்று பெயர். க்ரஹணம் பிடிக்க ஆரம்பிப்பதை ஸ்பர்சம என்பர். பரமைகாந்திக்கு வேதாந்தர ஸ்பர்சமும் (ஸ்ரீமந் நாராயணனைத் தவிர மற்ற தேவதைகளின் தொடர்பும்) கூடாது என்பர் பெரியோர். வைதிக கர்மாக்களில் ருதிரனின் பெயரைச் சொன்னவுடன் अप उपस्पृश्य என்று ஜலத்தைத் தொட்டு சுத்தி செய்து கொண்டே மேற்காரியங்களைச் செய்யவேண்டுமென்று ஸ்ம்ருதி முறையிடுகிறது. கங்கை நீராயினும் கபாலத்தில் வைத்திருந்தால் அது அசுத்தமே. இது ஸ்பர்சத்தால் வந்த தோஷம்.

ஸ்ரீராமன் இலங்கைக்குச் செல்ல அணைகட்டிய போது வாநர வீரர்கள் மலைகளைக்கொணர்ந்து எறிந்து கடலைத் தூர்த்தனர். அதைக் கண்ட அணில்கள் தாமும் தம்மாலியன்றதைச் செய்ய எண்ணி கடலில் மூழ்குவதும், அந்த ஈர உடம்போடு மணலில் புரண்டு உடலில் ஒட்டிக் கொண்ட மணல்களைக் கடலிலே கொண்டு உதறுவதாய் இருந்தன. அதைக்கண்ட ராமபிரான் மிக உகந்து அவற்றைத் தமது திருக்கையால் தடவிக் கொடுத்ததாகவும், அதன் அடையாளமாகவே இன்றளவும் அணில்களின் முதுகில் கைவிரல்கள் படித்தாற் போல் கோடுகள் காண்கின்றன என்றும் கூறுவர்.

ஸ்வாமி தேசிகன் பகவத் த்யான ஸோபாநத்தில் पदाम्भोजं स्पृशति என்ற ச்லோகத்தில் பின்வருவாறு அருள்கிறார்: ''என்னுடைய இந்த புத்தியானது திருவரங்கனுடைய திருவடித் தாமரையைத் தொடுகிறது, கணைக்காலை ஸேவிக்கிறது, இரு தொடைகளிலும் மெல்ல நன்கு படிகிறது. மேலே திருவுந்தியை நெருங்குகிறது. திருமார்பில் தங்குகிறது, திருக்கைகளில் சுழல்கின்றது. திருமுகக் காந்தியை அள்ளிப்பருகுகிறது. கிரீடத்தில் நிலைவைக் கொள்ளுகிறது.''

ஹம்ஸ ஸந்தேசத்தில் मलासिक् என்ற ச்லோகத்தில் தூது விடும் ஹம்ஸத்தினிடம் சக்ரவர்த்தித் திருமகன் இவ்விதம் கூறுவதாக ஸ்வாமி தேசிகன் அருள்கிறார்: ''காஞ்சியில் பேரருளாளன் மாலைநேரங்களில் பிராட்டியோடு அங்குள்ள சோலைகளுக் எழுந்தருளி தன்னிஷ்டப்படி உல்லாசமாகப் பொழுது போக்குவான். அவன் உலாவும் போது பிராட்டியின் இடக்கையைத் தன் வலக்கையால் பிடித்துக்கொண்டு நடப்பான். அப்போது அவன் திருக்கைபட்ட இன்ப உணர்ச்சியால் பிராட்டியின் கை மிக்க வியர்த்திருக்கும். அப்போது அந்த கரம் தேனில் நன்கு நனைந்துள்ள தாமரை மலர் போல் காட்சி தரும். அந்த சேர்த்தியில் நீ அவர்களுக்கு உன் சிறகினால் வீசி கைங்கர்யம் செய்வாயாக.''

अघर्मजस्वेद என்ற யாதவாப்யுதய ச்லோகத்தில் ஸ்வாமி தேசிகன் அருள்வதாவது: கோடையென்ற காரணமின்றியே நேர்ந்த வியர்வைபொட்டுகளும், அச்சமின்றியே ஏற்பட்ட நடுக்கமும், உஷ்ணமாகாமல்குளிர்ந்த நீர் ததும்பிய கண்களுமுடைய ருக்மிணியைக் கண்டு இதற்குத் தன் சேர்க்கையாலான மகிழ்ச்சியே காரணமென்று கண்ணன் களித்தான்.

திருச்சந்தவிருதத்தில் 2ம் பாசுரத்தில் '' ஊறொடோசையாய வைத்து மாயவாயமாயனே '' என்றதற்கு '' பரமபக்தியுக்தராயிருப்பார்க்கு ஸர்வவித போக்யமுமானவன். 'ஊறோடோசை' என்று சப்தாதிகள் ஐந்துக்கும் உபலக்ஷணம். 'உண்ணும் சோறு பருகுநீர் சேலெய் கண்ணியமும் பெருஞ்செல்வமும் என்னக்

கடவதிறே" என்று பூர்வர்கள் வ்யாக்யானம். அதாவது ஸ்பர்சம், சப்தம் என்ற இரண்டைச் சொன்னது மற்ற ரூப, ரஸ கந்தங்களையும் சொன்னபடி. இவையெல்லாம் எம்பெருமானாகையாவது 'உண்ணும் சோறு பருகு நீர் தின்னும் வெற்றிலையெல்லாம் கண்ணன்' என்றும் 'சேலேய் கண்ணியரும் பெருஞ்செல்வமும் நன்மக்களும் மேலாய்த் தாய்தந்தையுமவரே யினியாவார்' என்றும் நம்மாழ்வார் அருளியபடியே மற்ற விஷயங்களில் விருப்பு ஒழிந்து தன்னையே எல்லாவித போக்யமுமாய்ப் பற்றலாம்படி எம்பெருமானிருக்கை கண்டு கேட்டுற்று மோந்துண்டுழறுமைமங்கருவி கண்டவின்பமெல்லாம் எம்பெருமானாயிருக்கும் மெய்ப்பொருள் கண்டார்க்கு என்றபடி. இப்பொருளை இசைந்தே இதற்கு வேறு பொருளும் உத்தமூர் ஸ்வாமி வருமாறு உரைப்பர்: உஷ்ணம், சீதம், அநுஷ்ண சீதம், ம்ருது, கடினம் என்ற ஐந்து ஸ்பர்சங்கள் போலே ஓசையெனப்படும் ஸாமமும் ஹிங்காரம், ப்ரஸ்தாபம், உத்கீதம் ப்ரதிஹாரம், நிதனம் என்று ஐந்து பாகங்களாம். பூர்வர்கள் வ்யாக்யானத்தில் 'ஊறொடோசையாய ஐந்து' என்று ஓர் ஐந்தாய் எடுத்துக் கொள்ளப்பட்டது. இங்கு ஊறு ஐந்து ஓசை ஐந்துஎன்று இரண்டு ஐந்துகளாக எடுத்துக்கொள்ளப்பட்டது.

हरिर्हरति पापानि दुष्टचित्तैरपि स्मृत : ।
अनिच्छयापि संस्पृष्टो दहत्येव हि पावक : ॥

என்ற ச்லோகம் ஹரி நாம ஸங்கீர்த்தன மஹிமையை விளக்குகிறது. எவ்விதம் அறியாமல் நன்கு தொடப்பட்டாலும் நெருப்பு எரிக்காமல் விடாதோ, அவ்விதமே ஹரிநாமத்தை துஷ்டசித்தமுள்ளவர்கள் நினைத்தாலும் அவர்களுடைய பாபத்தை பகவான் போக்குகிறான் என்றபடி.

கைகேயின் பேச்சுக்குக் கட்டுப்பட்டு ராமனைக் காட்டுக்கனுப்பிய தசரதன் பட்ட சோகத்தை வால்மீகி இவ்விதம் வர்ணிக்கிறார். हत्वेव ब्राह्मणं कामात् स्पृष्ट्वाग्निमिव पाणिना । தெரிந்தே ப்ராஹ்மணனைக் கொன்றும், நெருப்பைக் கையினால் தொட்டும் ஒருவன் எப்படி வருத்தப் படுவானோ அவ்விதம் தசரதன் தபித்தான் என்றபடி.

இலங்கையைக் கொளுத்திய சிறிய திருவடி ஸீதையும் அழிந்திருப்பாளோ என்று ஏங்கித்துப் பிறகு தாமே இவ்வாறு மனம் தேறுகிறார்.

नहि धर्मात्मनस्तस्य भार्याममिततेजस : ।
स्वचारित्राभिगुप्तां तां स्प्रष्टुमर्हति पावक : ॥

"மிக்க தேஜஸ பொருந்தியவரும் தர்மாத்தாவுமான பரமனுடைய பார்யையும், தன்னுடைய சீலத்தினால் நன்கு காக்கப்பட்டவளுமான ஸீதையை நெருப்பு ஸ்பர்சிக்கவொண்ணாது." शीतो भव हनूमतः என்ற ஸீதையின் வாக்குப்படியே, வாலிலிருந்த நெருப்பே ஹநுமானை தஹிக்கவில்லையென்றால் அது ஸீதையை எப்படி தஹிக்கும்? மேலும் அக்னியிடமிருந்தே ராமன் ஸீதையை மறுபடியும் பெற்றானல்லவா?

பரமபாகவதனான ப்ரஹ்லாதனை நெருப்பிலிட்டெரித்த போது அது அவனுக்கு சீதளமாக இருந்தது. அருகிலிருந்தவர்கள் உஷ்ணம் தாங்காமல் தூரே செல்ல, ப்ரஹ்லாதனுக்கு அது தாமரைப் பூக்களால்



ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில்-ரிஷிகேஷ்.

விரித்த படுக்கை போல் குளிர்ச்சியாக ஸுகமாக இருநதது. तातैष वाह्नि என்ற ச்லோகததில் ஸ்ரீவிஷ்ணு புராணம் இதை விவரிக்கிறது.

सुतं पतन्तं प्रसमीक्ष्य पावके न बोधयामास
पतिं पतिव्रता |
तदा ह्यसौ तद्गतशक्तिपीडितो हुताशन
श्चन्दनपङ्कशीतल : ||

என்று ஒரு ச்லோகம். 'தன் குழந்தை நெருப்பில் விழுவதைக் கண்டும் பதிவ்ரதையானவள் தன்மடியில் படுத்திருந்த கணவனை, அவனது நித்ரைக்கு பங்கம் வருமென்றெண்ணி, எழுப்பவில்லை. இவள் குழந்தையை நான் தஹித்தால் இந்த பதிவ்ரதையின் கோபாக்நி என்னையே எரித்துவிடும்' என்று அஞ்சின அக்நிதேவன் குழந்தைக்கு உடலில் சந்தனத்தை பூசினால் உண்டாகும் ஸுகத்தை அளித்தான். இது பதிவ்ரதையின் மஹாத்மியத்தை விளக்குகிறது.

'மனைவியின் பிரிவும், நல்லவனுக்குக் குற்றமிழைப்பதும், கடனில் மிச்சமிருப்பதும், தீயவனிடம் தொழில் செய்வதும், வறுமை நிலையில் உறவினர்களின் வருகையும் நெருப்பில்லாமலே ஒருவனை தஹிப்பவையாம்' என்று மற்றோர் வசனம் உரைக்கிறது.

திருப்பாவையில் "மெத்தென்ன பஞ்சசலநத்தின் மேலேறி" என்றவிடத்தில் அழகு, குளிர்த்தி, மென்மை, பரிமளம், வெண்மை என்கிற ஐந்து குணங்களின் அமைப்பு சிறந்த சயனத்தின இலக்கணமென்பர். இதில் குளிர்த்தி, மென்மை இரண்டும் ஸ்பர்சஸுகத்தைக் காட்டும். "மென்பள்ளி வெம்பள்ளியாலோ" என்கிற படியே விரஹத்தில் குளிர்ந்த படுக்கையே அக்நியைப் போல் சுடுமாம். அதே போல் தண்வாடையென்றே பெயர்பெற்ற குளிர்ந்த காற்றும், தண்மதியம் என்னும்படியான சீதளமான நிலவும் காமினிக்குப் பிரிவில் அழலாய்த்திகழும் என்பர்.

ராமனைப்பிரிந்த தசரதன் கௌஸலையையிடம் கூறுகிறுன்.

न त्वा पश्यामि कौसल्ये साधु मां पाणिना
स्पृश |
रामं मे ऽनुगता दृष्टि रद्यापि न निवर्तते ||

"ராமன் பின்போன என் பார்வை இன்னும் திரும்பிவரவில்லை. ஆகையால் நான் உன்னைக் காண்கிறேனில்லை. என்னை உனது கரத்தினால் நன்றாக ஸ்பர்சி" தன் பார்வை போனது போலவே தன் ஸ்பர்சமும் போய்விட்டதோ என்று தசரதன சங்கித்துத் தன்னை நன்றாகத் தொடும்படி கௌஸல்யையை வேண்டிக்கொண்டான் போலும்.

தமது க்ருஹத்திற்குக் கண்ணபிரான் எழுந்தருளிய போது விதுரர் அவருக்குத் தகுந்த ஆஸனமளித்தாா. துர்யோதனனின் ஸபையில் பொய்யாஸனமிட்டுக் கண்ணனைக் கொல்லப்பார்த்தனர் என்று கேள்விப்பட்டு संस्पृशन्नासनं शौरे स्विुरस्त महा-माति: என்கிறபடியே தாமே இட்ட ஆஸனமாயிருந்த போதிலும், பரிவாலே அது சரியாக உள்ளதா என்று நன்றாகத் தடவிப் பார்த்தாராம் மஹாபுத்திமானான அந்த விதுரர்.

ராமன் ஸீதையைப் பிரிந்திருந்த போது वाहि वात यत : कान्ता तां स्पृष्ट्वा मामपि स्पृश । 'என்னுடைய ப்ரியை எங்குள்ளாளோ அங்கு வீசு, அவளை ஸ்பர்சித்துப் பிறகு என்னையும் ஸ்பர்சிப்பாயாக'. என்று காற்றை வேண்டிக் கொண்டார்.

முதலை வாய்ப்பட்ட கஜேந்திரனை விடுவித்து स्पर्शयामास हस्तेन என்கிறபடியே பகவான் தன் திருக்கைகளால் தடவிக் கொடுத்தார். ஸஹஸ்ரநாமத்தில் रक्षण : என்ற திருநாமத்திற்கு तं स्पर्शन परिरम्भण सान्त्व-नादिभि : रक्षितवान् । "அந்த கஜேந்திரனைதடவிக்கொடுத்தல், அணைத்தல், ஆறுதல் கூறுதல் முதலியவற்றால் பகவான் ரக்ஷித்ததால் அவனுக்கு रक्षण : என்று பெயர்" என்று ஸ்ரீபராசர பட்டர் தமது பாஷ்யத்தில் வியாக்யாநம் அருளியுள்ளார். இது நம்மாழ்வாரின் "மழுங்காத வைந்நுதிய" என்ற பாசுரத்தை மனதில் கொண்டது. தனது ஸங்கல்பத்தினாலேயே பகவான் முதலையைக் கொன்று கஜேந்திரனைக் காப்பாற்றியிருக்கலாமே, எதற்காக அரைகுலையத் தலைகுலைய ஓடிவர வேண்டும் என்ற கேள்விக்கு, தன்னிடம் சிறந்த பக்தியுள்ள கஜேந்திரனைத் தடவிக் கொடுத்தல், அணைத்தல், ஆறுதல் கூறுதல் முதலியவை ஸங்கல்பத்தினால் செய்யக்கூடியவையல்ல நேரில் வந்தே நடத்தக் கூடியவை என்பதை நம்மாழ்வார் "தொழுங்காதல் களிறளிப்பான்" என்று அப்பாசுரத்தில் அழகாகக் காட்டியுள்ளார்.

"தொட்டபடையெட்டும் தோலாதவென்றியான் அட்டபுயகரத்தான்" என்றருளினார் பேயாழ்வார். "செம்பொனிலங்கு" என்ற பாசுரத்தில் திருமங்கையாழ்வார் அருளியபடியே அம்பு, வில், கதை, சங்கம், வாள், சக்கரம், கேடயம், மலர் என்ற எட்டு திவ்யாயுதங்களையும் ஓர் ஆயாஸமின்றியே பூஏந்திருப்பபோல் தொட்டு நிற்பவனாய், அவற்றில் ஏதேனும் ஓர்ஆயுதத்தைப் பிரயோகிப்பதற்காகத் தொட்டாலும், அவ்வாயுதத்தால் தோல்வி என்பதையே அறியாமல் எதிரிகளைப் பூண்டோடு அழித்து வெற்றியடையும் ஆண்பிள்ளையாயிருப்பவன் என்று இங்குப் பொருள் கூறுவர்.

இரணியன் ப்ரஹ்லாதனை, 'நீ சொல்லும் ஹரி எங்குளன்? இந்த கம்பத்தில் அவனைக் காண்பி, இல்லையேல் உன்னைக் கொன்று விடுவேன்" என்றான். அதற்கு ப்ரஹ்லாதனின் பதில் கம்பராமாயணத்தில் வருமாறு:

> என்னுயிர் நின்றாத் கோறற்கெளிய
> தொனறன்றியான்முன்
> சொன்னவன் தொட்டதொட்ட விடந்
> தோறும் தோன்றானாயின்
> என்னுயிர்யானே மாய்ப்பல் பின்னும்
> வாழ்வுகப்பலென்னில்
> அன்னவற்கடியேனல்லனென்றனன்
> அறிவின் மிக்கான்

அதாவது, அறிவிற்சிறந்தவனான ப்ரஹ்லாதன் இரணியனை நோக்கி எனது உயிர் உனனால் கொல்லப் படு

வதற்கு எளியது ஒன்றன்று. என்னால் முன்பு சொல்லப்பட்டவனான அத்திருமால் நீ தொட்ட தொட்ட இடங்களிலெல்லாம் வெளிப்பட்டுக் காணாமற்போவானேயானால் எனது உயிரை நானே மாய்த்துக் கொள்வேன். அங்ஙனம் செய்யாமல் பின்னும் இவ்வுலகவாழ்க்கையை விரும்பி ஜீவித்திருப்பேனானால், அப்பெருமானுக்கு நான் அடியேனல்லன்' என்று ப்ரதிஜ்ஞை செய்தான் என்றபடி.

பெரியாழ்வார் "உளந்தொட்டிரணிய னொண்மார்பகலம் பிளந்திட்ட கைகளால் சப்பாணி பேய்முலையுண்டானே சப்பாணி" என்றருளினார். இங்கு 'உளந்தொட்டு' என்பதற்கு 'ஹ்ருதயபரீக்ஷைபண்ணி' என்பது பொருள் என்பது பின்வரும் மாமுனி வ்யாக்யாநத்தால் விளங்கும். 'எங்குமுளன்' என்று ப்ரஹ்லாதன் சொன்னபடியே, தான் 'இல்லை' என்று சொன்னதலந்தனிலே 'உண்டு' என்னும்படியாய்த் தோன்றுகையாலும், 'சிறம்பற்றி முடியிடியக் கண்பிதுங்க • வாயலறத் தெழித்தான்' என்கிறபடியே ஒறொன்றேதுஸ்ஸஹமாம்படி பண்ணின பீடாவிசேஷங்களாலும், பீதியாலே நெஞ்சிளகி அநுகூலிக்கக்கூடுமோ என்று ஹ்ருதய பரீக்ஷை பண்ணி", இத்துடன் "உன்னைச் சிந்தையினாலிகழ்ந்த விரணியனகல் மார்வம் கீண்ட என்முன்னைக் கோளறியே முடியாததென்னனக்கே" என்ற நம்மாழ்வார் பாசுரத்தையும் சேர்த்து அநுபவிக்க ப்ராப்தம். அங்கு ஈடுவருமாறு: "உக்திமாத்ரமன்றிக்கே, நெஞ்சாலே இகழ்ந்தானாயிற்று. இத்தால் அவன் விடுவது புத்தி பூர்வம் ப்ராதிகூல்யம் பண்ணினாரை; கைக்கொள்ளுகைக்கு மித்ர பாவம் அமையும்? ஆக, உளந்தொட்டது இரணியன் புத்திபூர்வமாக இகழ்கிறானா அல்லது வெறும் உக்தி மாத்ரத்தாலேயா என்பதை அறிய என்க."

"மைவண்ணத் தரக்கிபோரின் மழை
வண்ணத்தண்ணலே யுன்
கைவண்ணமங்குக் கண்டேன் கால்
வண்ணமிங்குக்கண்டேன்"

என்று விச்வாமித்ரன் ராமனைக் கொண்டாடியதாகக் கம்பன் அகலிகைப்படலத்தில் கூறுகிறான். அதாவது "மேகம் போன்ற திருமேனி நிறத்தையுடைய ஸ்ரீராமனே! அங்கு (வரும் வழியில்) ராக்ஷஸியோடு செய்த யுத்தத்தில் உனது கைத்திறத்தைக் கணடேன்; இங்கு (கல்லைப் பெண்ணாக்கியவிடத்தில்) உனது திருவடியின் திறத்தைப்பார்த்தேன்" என்றபடி,

"தேசமுன்னளந்தவன் திருவிக்கிரமன்
திருக்கையாலென்னைத் தீண்டும்
வண்ணம்
சாயுடை வயிறும் மென்தடமுலையும்
தரணியில் தலைப்புகழ்தரகிற்றியே"

என்பது நாச்சியார் திருமொழியில் ஆண்டாள் பாசுரம். மூவுலகும் மாவலியால் அபஹரிக்கப்பட்ட காலத்தில் ஸகல லோகங்களையும் திருவடியாலளந்தவனும், த்ரிவிக்ரமன் என்னும் திருநாமமுடையவனுமான கண்ணபிரான் என்னுடைய ஒளிபொருந்திய வயிறையும் மென்மையும் பருமையும பொருந்திய முலைகளையும் தனது திருக்கைகளினால் ஸ்பர்சிக்கும்படி பண்ணி பூமண்டலத்தில் நிலைநின்ற கீர்த்தியை நான் பெறும்படி செய்தருள வேண்டும் என்று ஆண்டாள் வேண்டிக்கொள்கிறாள். இங்கு அரும் பதவுரை "அவன் திருக்கையால் தீண்டுகையே நிலை நின்ற புகழ்" என்று காட்டுகிறது. விச்வாமித்ரன் ராமனின் கைவண்ணத்தை முதலில் கண்டு கால் வண்ணத்தைப் பின்பு அறிந்தான். ஆண்டாள் த்ரிவிக்ரமனின் கால்வண்ணத்தைக் காண விரும்புகிறாள்!

"முழுதும் வெண்ணெயளைந்து தொட்டுண்ணும்" என்று பெருமாள் திருமொழியில் குலசேகராழ்வார் பாசுரமுள்ளது. இங்கு பெரியவாச்சான் பிள்ளை வ்யாக்யாநம் வருமாறு: "(முழுதும் வெண்ணெயளைந்து) வெண்ணெயிலுண்டான ஆதரராதிசயத்தாலே திருக்கைகளை வெண்ணெய் குடத்திலே இட்டுஅளையுமாய்த்து (தொட்டுண்ணும) அதிசாபல்யத்தாலே மாளுமென்று 'விரலோடுவாய் தோய்ந்த என்னுமாப்போலே தொட்டுண்ணுமாய்த்து". இத்தப்பெருமாள் திருமொழிப் பாசுரம் திருவாய்மொழி 2-3-5ன் ஈட்டில் எடுக்கப்பட்டுள்ளது. அதற்கு அரும் பதவுரை கீழ்க்கண்டபடி: "தொட்டுண்ணும்—ஆசார்யருடைய தீர்த்த ப்ரஸாதங்களைச் செலவழியாமல் நாள்தோறும் பேணி ஜீவிப்பாரைப் போலே. 'ஆச்ரித ஸ்பர்சமுள்ள வெண்ணெய் செலவழியிற்செய்வதென? என்று தொட்டு தொட்டு நக்கா நிற்குமாயிற்று." 'விரலோடு வாய் தோய்ந்த' என்று எடுக்கப்பட்ட முதல் திருவந்தாதிப் பாசுரம் வருமாறு:

விரலோடு வாய் தோய்ந்த
வெண்ணெய் கண்டு, ஆய்ச்சி
யுரலோடுறப் பிணித்த நான்று—
குரலோவா
தேங்கி நினைந்து அயலார் காண
இருந்திலையே
ஒங்காதவண்ணாவுரை

இதற்கு அழகான விளக்கம் வருமாறு: திருக்கையிலே அள்ளி திருவாயிலே வைத்தவித்தனை; அமுது செய்யவும் பெறவில்லை. அதற்குள் தடுத்து விட்டாளே தாயாயிருந்தவள்! அமுது செய்தபின் கட்டப்பட்டாலும் ஆறியிருக்கலாமே! வாயில் படும்போது வாயதுகையதாகக் கட்டிவிட்டாளே! "வெண்ணெய் விழுங்கி வெறுங் கலத்தை வெற்பிடையிட்டு அதனொசை கேட்கும் கண்ணபிரான் கற்ற கல்வி" (பெரியாழ்வார்திருமொழி 2-5-8) என்று வெண்ணெய் முழுவதையுமுண்டதாகவும் சொல்லுகிறது; "விரலோடு வாய்தோய்ந்த" எனறு வாயில் தோய்ந்த வித்தனையேயொழிய உண்ணவில்லை என்றும் சொல்லுகிறது. இவை இரண்டும் எப்படிப் பொருந்தும? என்று பிள்ளைத்திருநறையூரரையர் பட்டரைக் கேட்க, "வைகலும் வெண்ணெய் கைகலந்துண்டான்' (திருவாய்மொழி 1-8-5) என்கிறபடியே, இவனுக்கு வெண்ணெய் களவு செய்து உண்பது தானே பணி. ஒருநாள் உண்டபின பிடிபடுவான்; ஒருநாள் வாய் தோய்ந்தவுடன் பிடிபடுவான்" என்று பட்டர் அருளிச் செய்தாராம். வெண்ணெயெ உண்டானென்றால் திருமேனிக்குச் சேறாதுஎன்று பதறுவதும், வாய் தோய்ந்தவுடன் பிடிபட்டான் என்றால் 'உண்ணவும் பெற்றானில்லையே' என்று வயிறெரிவதும் ஆழ்வார்களுக்குப் பணியாகையாலே இரண்டு விதமாகவும் அநுஸந்திக்கக் குறையில்லை என்பர்.

ஒன்றைத் தொட்டால் மற்றொன்று என்று ஸ்பர்சம் நம்மை எங்கேயோ இழுத்துச் செல்கிறது. ஆகவே இத்துடன் நிறுத்திக் கொள்வோம்,



# சிங்கவேள்



செவ்வேள் எனும்போது முருகனையும், கருவேள் எனும் போது மன்மதனையும் நாம் நினைக்கிறோம்.

வேள் என்னும் சொல்லுக்கு யாவராலும் விரும்பப்படுகின்ற பேரழகு வாய்ந்த பெருமான் என்பது பொருள்.

இந்த வகையிலே சிங்கவேள் என்பது நரசிம்மபெருமாளைக் குறிக்கும் ஒரு சொல்லாக வழங்கி வருகிறது.

சிங்கவேள் குன்றம்என்பது அஹோபிலம் என வழங்கப்படும் வடநாட்டுத் திருப்பதிகளுள் ஒன்றாகும். இந்த திவ்யதலத்தின் கண் உள்ள நரசிம்ம மூர்த்தியைக் கண்டு கை தொழுத திருமங்கைமன்னன — கண்டார்தம் கை தொழுதேத்திக காதலிக்கின்ற கட்டழகு வாய்ந்த அலங்காரப் பிரியனான மகாவிஷ்ணு ஏன் இப்படிப்பட்ட பயங்கரமான சீற்றமிக்க ஒரு திருவுருவத்தை ஏறிட்டுக்கொண்டான் என நினைக்கிறார்.

பரமபக்த சிரோமணியான பிரகலாதனுக்கு அவன் தந்தையால் நேர்ந்த துன்பங்களை நீக்கவே இத் திருவுருவம் கொண்டார்.

பிரகலாதனுடைய தந்தையாகிய இரணியன் மகா பலசாலி; வீரம் மிகுந்தவன். வரம்பல பெற்றவன். ஆண், பெண், அலி எனும் எப்பகுப்பினராயினும் தேவர்கள் இயக்கங்கள் யாவரேயாயினும் அவன் உயிரை வாங்க இயலாத வரம் பெற்றவன்.

இது மட்டுமா! அவன் நீரிலும நிலத்திலும் நெருப்பிலும் காற்றிலும் உள்ளும் புறத்தும், எப்படையினாலும் சாகாவரம் பெற்றவன்.

இப்படிப்பட்ட வரங்களை அவன் அடைந்திருந்த காரணத்தினால் தனக்கு நிகர் தானே என ஆணவம அவன கணகளை மூட, தானே இறைவன: தானே கடவுள் எனத் தன்நாட்டில் தன்னைப் பிரகடனப்படுத்திக் கொண்டான். ஓம் நமோ நாராயணாய நம: என இறைவன் பெயரை உச்சரிக்கவும் கூடாது. இனி 'இரணியாய நம: என்றுதான் உச்சரிக்க வேண்டும் என உத்தரவும் பிறப்பித்து விட்டான்.

எந்த ஒரு மனிதனுக்கும் பணம், பதவி, பலம் நீண்டஆயுள் இருந்தால் அவனுக்கு ஆணவம் மிகுந்து விடுகிறது. கர்வம் தலைக்கேறி விடுகிறது. அப்படியிருக்க எல்லா உலகங்களையும் வெற்றி கொண்ட இரணியன் - பணபலம், பதவிபலம், ஆயுள் பலம் (இறவாத வரமாகிய பலம்) எல்லாம் பொருந்தியுள்ளவன் - ஏன் தன்னை இறைவனாகப் பிரகடனப் படுத்திக் கொள்ள மாட்டான்.

இந்த வகையில் இரணியன் தன் உடலை மட்டுமே தானாக நினைத்தான். உயிரை மறந்தான் - தான் யார் என்பதை உணரமறுத்தான். அதன் பயன் தான் எனும் அகம்பாவமே ஓர் உருவானான்.

இரணியன் உத்தரவுக்கு யாவருமே கீழ்ப்படிந்தனர். நாராயணனை அவர்கள் நாக்கு உச்சரிக்கவில்லை. ஆனால் இரணியன் மகன் பிரகலாதன் மட்டும் தன் தந்தையின் பெயரைச் சொல்ல மறுத்தான. பள்ளிக்கூடத்தில் சேர்த்த முதல்நாளே இந்தப் பெயர்ப் புரட்சியைத் தொடங்கி விட்டான்.

அப்பெருமை வாய்ந்த சிறுவனுக்கு போதித்த ஆசிரியரோ 'அப்பா பிரகலாதா என்னையும் உன்னையும் கெடுத்தொழித்துவிட்டாயே, இப்படி நீசெய்யலாமா?' என்று அங்கலாய்க்க' அதற்குப் பதிலாக

" என்னை உய்வித்தேன் எந்தையும்
உய்வித்தேன் இனைய
உன்னைஉய்வித்தேன்இவ்வுலகையும்
உய்விப்பான் அமைந்து
முன்னை வேதத்தின் முதற்பெயர்
மொழிவது மொழிந்தேன்
என்னை குற்றம் நான் இயம்பியது
இயம்புதி என்றான் "

(கம்பர்-இரய-25)

---

நலங்கிள்ளி
அரக்கோணம்.

---

பிரகலாதன் என்பதாக ஆசிரியர் மூலமாகக் கேட்டறிந்த இரணியன், தன் மகனைமகன்என்றும் கருதாமல், யமகிங்கிரர்களாலும் செய்ய முடியாத பலவகைப்பட்ட துன்பங்களைச் செய்வித்தான்.

பிரகலாதன் செய்த தவறு என்ன? எவ்வுலகங்கட்கும் தலைவனாக ஆட்சி செய்திருப்பினும் தன் தந்தையை அவன் பரம்பொருளாக, கடவுளாக ஏற்றுக்கொள் ளாமையே.

இதற்கென அவன் அடைந்த தண்டனை சாதாரணமானதல்ல, கொலைத் தண்டனை.

கொலைத்தண்டனை பெற்ற மைந்தனை கொலைஞர்கள் அழைத்துப் போய் பல வகையிலும் கொல்ல முயன்றனர். அப்பாலகனைக் கொல்ல, எறிந்தனவும் எய்தனவும் ஏற்றினவும் குத்தினவும் ஈர்த்தனுமான படைகள் யாவும் முறிந்து நுண்பொடியாகிவிட்டன. நெருப்பிலிட்டனர். மலையில்இருந்து உருட்டிவிட்டனர். விட நாகங்களை விட்டு கடிக்க வைத்தனர்.

சாகா வரம் பெற்றவன் மகன் ந்த வகைப்பட்ட கொலைத் தாழில் எதனாலுமே சாகவில்லை.

பார்த்தான் இரணியன். தன் மக னத் தன்முன் நிறுத்திக்கேட்டான.

'எவரே உலகந்தந்தார் என் பெயர்
ஏததி வாழும்
மூவரே அலலாராகில முனிவரே
முழுதும தோற்ற
தேவரே பிறரே யாரோ செப்புதி''
என்ற

அவன் கேள்விககு விடையாகவே, பிரகலாதன் இறைவன் இலக்கணம முழுவதையும் தன தநதைககு உணர்த்துகிறான்.

"உலகு தந்தானும் பல்வேறுயிர்களை
கடந்தானும் உள்ளுற்று
உலைவிலா உயிர்கள் தோறும
அங்கங்கே உறைகின்றானும்
மலரினில வெறியும் எள்ளில எண்
ணெயும் மற்றும் நேளாய்
அலகில தொல் புகழும் பற்றி முற்றிய
'அரி' காண் அத்தா"
(கம்ப. இர. 120)

இதைக் கேட்டதும் இரணியனுக் குச் சிரிப்பு வந்து விட்டது. நீ சொன்னவன் எள்ளில் எண்ணெய் போல எங்குமுளன் என்றாய். அப் படியானால் "இதோ இங்கு நின்றுள இத்தூணில் உள்ளானோ சொல்" என்று கேட்ட அளவில் பிரகலாதன்,

"...இந்நின்ற தூணிலும் உளன் முன்
சொன்ன சொல்லினும் உளன்
இத்தன்மை
காணுதி விரைவில் என்றான்"

கேட்டான, இரணியன். அவனுக்குக் கோபம் மேலோங்கிற்று. 'இங்கே இத்தூணில் உளனா? அப்படியா! எனக்குக் காட்டுவாயா அவனை. அப்படி நீ காட்டா விட்டால் உன்னை வெட்டி உன் உடலையும் தின்று விடுவேன்" என்று கூவினான்.

"என்னுயிரையா? நீயா மாய்க்க முடியும்? முடியாதே! அதை நீயே கண்டாய் அல்லவா. ஆனால நான சொன்ன அந்தப பரம பொருளை தொட்ட தொட்ட இடமதொறும தோன்றானாயின, என்னுயிர் யானே மாய்ப்பன்'' என்று பதிலளிககிறான்.

இதைக்கேட்ட இரணியனுக்குக் கோபம மேலோஙகி விடுகிறது. நனறு நன்று எனறு கூடி இடி இடி எனச் சிரிக்கிறான். இடி இடித்ததைப் போல தன் கையால் அங்குளள தூணைப்புடைக்கிறான. புடைத்த உடனே, "திசை திறந்து அணடங் கீறிச் சிரித்தது செங்கட்சீயம''

ஆம் தூணில் இருநது வெளிபபட் டது செங்கண படைத்த சிங்கம். அது வெளிபபட்டதோ எட்டுத்திசை களையும திறந்து கொண்டு அணடத தைக் கீறி வெளிப்பட்டதைப் போல இருந்தது.

தூணைப் பிளந்து கொண்டு வெளிப்பட்ட சிங்கம எப்படி இருந் தது எனபதை கமபர்வாக்கால் காண லாம்.

"பிளநதது தூணும ஆங்கே,
பிறந்தது சீயம் பின்னை
வளர்ந்தது திசைகள் எட்டும்,
பகிரண்டம் முதலமற்றும
அளந்ததப்புறத்துச செய்கை, யார்
அறிந்து அறையகிற்பார்
கிளர்ந்தது ககன முட்டை, கிழிந்தது
மேலும் கீழும்

இவ்வண்ணமாக வெளிப்பட்ட நரசிம்மாவதாரம் திருமங்கை ஆழ் வாரின் மனக்கண முன வந்து நிற் கிறது, அவர் சிங்கவேள் குன்றம என்னும் (அஹோபிலம்) திருப்பதி யின் கண்ணே வந்து நின்று அங்குளள பெருமாளைச் சேவிக்கும் போது.

"அங்கண் ஞாலம் அஞ்ச அஙகோர்
ஆளரியாய் அவுணன்
பொங்க ஆகம் வள்ளுகிரால் போழ்ந்த
புனிதனிடம்
பைங்கண் ஆனைக்கொம்பு கொண்டு
பத்திமையால் அடிக்கீழ்ச்
செங்கண் ஆளி இட்டிறைஞ்சும்
சிங்கவேள் குன்றமே"

பாடல் நிகழ்ச்சியை நனகு படம பிடித்துக் காட்டுகிறது.

நிறபுகழ
புகைநத நெஞ்சின புலர்ந்த சாநதின
பிரகலாதன் பலபல பிணிபட
வலநதுழி மலாந்த நோய் கூா
கூமபிய நடுக்கத்து
அலர்ந்த புகழோன் தாதை ஆகையின்
இகழவோன, இகழா நெஞ்சினனாக
நீ இகழா
நன்றா நட்ட அவன் நன் மாாபு
முயங்கி
ஒனறா நட்ட அவன் உறுவரைமார்பில
படிமதம சாம்ப ஒதுங்கி
இன்னல இனனரொடு இடிமுரசு
இயமப
வெடிபடா ஒடிதூண் தடியோடு
தடி தடி பலபடி வகிாவாய்ந்த
உகிரினை

"பிரகலாதன் உன்னைப் புகழ்நத தால் இரணியன் புழுஙகிய மனத்தின னாய் பலப்பல இன்னல் இழைத்தான். அவ்வாறு துன்பமிழைத்தவன் தன் தந்தையாதலினாலே அவனை பிரக லாதன் இகழவில்லை.

நீயோ பிரகலாதன் பொருட்டாக இரணியனின் பெருமலை போன்ற மார்பிற் பாய்ந்து, அவன் அகந்தை அழிய, அவனைக் கொன்றனை.

அவ்வேளையில் மிக்க உற்பாதங் களோடு இடியாகிய முரசமும் வானி டத்தே எழுந்து ஒலித்தது.

வெடிபட்டு துண்டாய்ப் போன தூணின் துணடங்களுடனே இரணிய னது தசைத்துணடங்களும் பலவாறா கக் கலந்து சிதறி வீழ, அவன் மார் பைப் பிளந்தனை.

அப்படி மார்பினை இரண்டாகப் பிளக்கும்படிச்செய்த வலியமைந்த நகத்தினை உடையவனே நரசிங்கப் பெருமானே"

என்று பாராட்டுகிறார் கடுவன் இளவெயினனார் எனும் சங்ககாலப் புலவர்

இதன மூலம் திருமால் வழிபாட்டிலே, நரசிங்கப்பெருமான் வழிபாடல், சிறப்பம்சம் சங்ககாலத்திலும் வகித்ததை நாம் நன்கு காணலாம். திருப்பாடல் இது.

'பிரகலாதா! நீ சொல்கின்ற அரி இங்கில்லை என்று இரணியன் சொன்ன அளவில், அங்கே, அழகிய விசாலமான உலகில் உள்ளவரெல்லாம் அஞ்ச, ஒப்பற்ற நரசிம்மமூர்த்தியாய் அவதரிக்க, அதைக்கண்ட இரணியன் சினத்தினாலே பொங்க, அவன் உடலைத் தன் கூர்மையான நகங்களாலே இருகூறாகப் பிளந்த புனிதனின்இடம்எதுவென்றால்சிங்கம் புலி, யானை முதலிய பயங்கரமான விலங்குகள் நடமாடும் இடம், கல்லும் முள்ளும் முரடு புதருமானஇடம் இந்த திவ்யத்திருப்பதியிலே) சீற்றத்தினாலே சிவந்த கண்களை உடைய, சிங்கங்கள் பசுமையான கண்களை உடைய யானைகளின் தந்தங்களைக் கொணர்ந்து பக்தியால் இறைவன் திருவடிகளிலே வைத்து இறைஞ்சுகின்ற சிங்கவேள் குன்றம் என்னும் திவ்ய க்ஷேத்திரமாகும்" என்பது இதன் பொருள்.

மிருக ராஜனான சிங்கம், தான் கொன்ற யானையின் தந்தங்களை நரசிம்மசுவாமியின் பாதகமலங்களில் வைத்து வணங்குகின்றது.

எந்தெந்த உயிர்கட்கு எது எது ஆகாரமோ அந்தந்த உயிர்கள் அந்த ஆகாரத்தைக் கொண்டு தம் தேவதைகளை ஆராதிக்கும் அல்லவா. அதன்படி சிங்கமும் நரசிம்மப் பெருமாளை தான் கொன்ற யானையின் தந்தங்களைச் சமர்ப்பித்து வணங்குகின்றனவாம்.

கொடிய வனவிலங்கான சிங்கமே பக்தியுடன் இறைவனை வணங்குகின்றதே! ஆறறிவு படைத்த மனிதன் இப்படி இறைவனை வணங்க முற்படவில்லையே எனக் குறிப்புணர்த்தி ஆற்றாமைப்படுகிறார் ஆழ்வார்.

## சந்தாதாரர்களுக்கு...

30-6-90—ஆம் தேதியுடன் முடிவடையும் ஸப்தகிரி சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. சந்தாவைப் புதுப்பித்துக்கொள்ளும்போது, தங்கள் சந்தா எண்களைக் கண்டிப்பாகக் குறிப்பிடவும். புகார்களுக்கும்,விவரங்களுக்கும் 'ஆசிரியர்'ஸப்தகிரி,தி.தி.தே. திருப்பதி எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

50 59 138 179 195 200 203 207 215 253 311 326 331 337 343 461 521 527 530 537 698 702 703 706 711 722 726 910 1294 1475 1524 1620 1642 1644 1651 1653 1685 1690 1784 2788 2945 3042 3048 3051 3057 3060 3064 3065 3068 3078 3082 3097 3098 3105 3106 3114 3125 3131 4279 4299 4358 4362 4365 4366 4369 4370 4371 4374 4385 4388 4390 4408 5424 5660 5662 5675 5682 5683 5685 முதல் 5693 5697 முதல் 5703 5940 6832

அஹோபிலத்திலே கண்ட நரசிம்ம மூர்த்தியை ஆழ்வார் திருவல்லிக்கேணியிலும் காண்கிறார். அங்கே அங்கண்ஞாலம் அஞ்ச அங்கோர் ஆளரியாய்க் கண்டார். இங்கோ, தெள்ளிய சிங்கமாகிய தேவாகக் காண்கிறார் திருமங்கை ஆழ்வார்.

" பள்ளியில் ஓதி வந்த தன் சிறுவன்
வாயில் ஓர் ஆயிரநாமம்
ஒள்ளியவாகிப் போத ஆங்கதனுக்
கொன்று மோர் பொறுப்பிலனாகி
பிள்ளையைச் சீறி வெகுண்டு தூண்
புடைப்ப பிறையெயிற்றனால்
விழிப்பேழ்வாய்
தெள்ளிய சிங்கமாகிய தேவைத
திருவல்லிக்கேணிக் கண்டேனே "

பகவான் பிறை போன்ற பற்களையும் நெருப்புப் பொறி பறக்கின்ற கண்களையும் நாக்கை மடித்த பெரிய வாயினையும் கொண்ட நரசிங்க மூர்த்தியாய் தோன்றி,

பள்ளியிலே படித்து விட்டு வந்த பிரகலாதனுகிய தன் மகன் வாயிலே, இறைவன்தன் ஆயிரம் நாமம் உச்சரிக்கப்பட, அதைக்கேட்டு பொறுக்க மாட்டாதவனாகிய இரணியன் தன் பிள்ளை மீது மிகவும் கோபித்து, தூணைப் புடைப்ப, அவன்முன்தெளி சிங்கபெருமாளாகத் தோன்றி இரணியனைப் பிளந்தழித்து பிரகலாதனுக்கு அருள் செய்தான். அப்பெருமானை திருவல்லிக்கேணியில் கண்டேன் என்கிறார் ஆழ்வார்.

நான் என்னும் அகந்தையே வடிவானன் இரணியன். இறைவன் இரணியனை அழித்ததன் மூலம், அகந்தை கொண்டவர்கள் அனைவருமே அழிவது நிச்சயம் என்பதாறது.

பிரகலாத ஆழ்வாரோ இறைவன் வல்லமையிலும் அருளிலும் பூரண நம்பிக்கை வைத்துத் தன்னை முற்றிலும் அவனிடம் ஒப்படைத்ததால் இறைவன் அக்குழந்தையை ஆட்கொண்டார்.



**(4-ஆம் பக்கத் தொடர்ச்சி)**

**வரை திருச்சானூர், திருப்பதி திருமலை மூன்று தெய்வத்தலங்களி லும் வெகு சிறப்பாக நடைபெற்றது.**

**முதல்நாள் தாயார் சந்நிதியில் பஜனையுடன் துவங்கி அன்று மாலை அன்னமாச்சார்யா கலாமந்திரத்தில் தெய்விக நிகழ்ச்சிகள் நடைபெற்றன. மறுநாள் காலை ? மணிக்கு மலை அடிவாரத்தில் 'படிவிழா' தொடங கப்பெற்று - பக்தி பாடல்களுடன், நாட்டின் பல்வேறு பகுதிகளிலும் இருந்து வந்திருந்த 5000 பக்தர் களும், 120 பஜனைக குழுவினர் களும், பக்திப்பாடல்களைப் பாடிய வாறே ஏழுமலையேறி ஏழுமலை யானை வழிபட்டார்கள்.**

**அன்று மாலை 5 மணிக்கு சதஸ் மண்டபத்தில் சிவகங்கை சேதுராமன் குழுவினரால் திரைப்பட பின்னணி வாத்தியங்களுடன் 'வேங்கடவன் - எனும்தலைப்பில்' இன்னிசை சொற் பொழிவு நடைபெற்றது. மறுநாள் காலை பக்திநூல்வெளியீடும், கவி யரங்கம், கருத்தரங்கம், பாமாலை நிகழ்ச்சிகள் நடைபெற்றன. இத் தெய்விகப் புண்ணியப் படிவிழாவில் ஸ்ரீபெரும்புதூர் ஸ்ரீவரத எதிராஜ ஜீயர் சுவாமிகள் ஸ்ரீனிவாச நிகேத னம் ஸ்ரீ சீதாராமசுவாமிகள் ஸ்ரீமுரு காஸ்ரம சுவாமிகள், திருமலை அனந்த நாராயண மூர்த்தி, ஸ்ரீவிஜய குமார், எம்.ஏ., பிஎச்.டி., சிரிப்பு நடிகர். கே.ஏ. தங்கவேல், நடிகை ராஜசுலோசனா, நடிகை எம். சரோஜா, நடிகர் காஞ்சி எஸ். கே. ரங்கமணி, அ.இ. வானொலி நிலைய** இயக்குநர் திருமதி. லீலா, ஸ்ரீசிறி வீராசாமி, சேலம் பி.ராமகிருஷ்ணன, மைலம்பேராசிரியர் சிவசுப்ரமண்யம, எழில்மணி, சம்பத் ஐயங்கார் மற்றும் பலபிரமுகர்கள கலந்துகொணடு பேசி னார்கள்.

படிவிழா சங்க பொதுக்காரியதரிசி யும்-திருப்பதி தேவஸ்தான தர்ம பிர சார பரிஷத்தின் அமைப்பாளருமான ஆற்காடு ஆ. செ. நரசிம்மன் அனை வரையும வரவேற்றுப் பேசினார்.

பொருளாளர் வி. ஏ. புண்ணிய கோட்டி நன்றி கூறினார்.

புலவர் பரந்தாமன் அவர்கள் எழு திய "திருமால் நெறிக் கட்டுரை கள்" என்கிற நூல் வெளியீட்டு விழாவில் குமாரவாடி ஸ்ரீ சே. ராமா னுஜாச்சாரி சுவாமிகள், 'ஸப்தகிரி' துணையாசிரியர் ஸ்ரீ என்.எஸ். ராம மூர்த்தி, எம்.ஏ., ஆகியோர் பங்கு பெற்று பாராட்டுரைகள் வழங்கி னார்கள்.

புதன்கிழமை நடைபெற்ற கருத் தரங்கில் ஸ்ரீரகுவீரபட்டாச்சாரியார் ஸ்ரீரகுநாத பாகவதர், ஸ்ரீ பூதேரி ஜெயராமன் மற்றும்பலர் பங்குபெற் றார்கள்.

படிவிழாவிற்கான ஏற்பாடுகளைக் திருப்பதி படிவிழா சங்க பொதுக் காரியதரிசியும் திருமலை திருப்பதி தேவஸ்தான தர்மபிரசார பரிஷத் தின் சென்னை (தமிழ்நாடு) அமைப் பாளருமான படிவிழாமணி ஆற்காடு செ. நரசிமமன, பொருளாளர் வி. ஏ. புண்ணியகோட்டி (பொருளாளர்) ஏ.எம். பாரத்வாசன, ஏ. ஆர். தேவகுமார் எம். எம். சுபரமணயன் ஆகியோர் மேறகொணடனர்,

தகவல. ஆ. செ. நரசிமமன்.

## தெபபோதஸவம

திருப்பதியை அடுத்துள்ள திருச் சானூரில உள்ள தி. தி. தேவஸ்தா னத்தாரின் ஸ்ரீ பத்மாவதி தாயார் திருககோயிலின் வருடாந்திர தெப் போத்ஸவம் 4-6-90 முதல் 8-6-90 வரை வெகு விமரிசையாக கொண டாடப்படஉள்ளது. இந்நாட்களின் போது ஸ்ரீகிருஷ்ணசுவாமி, ஸ்ரீசுந்தர ராஜ சுவாமி, ஸ்ரீ பத்மாவதி அம்மை யார் ஆகியோரின் உத்ஸவ மூர்த்தி கள் தெப்பத்தை அலங்கரிப்பர்.

ஃ ஃ ஃ

## லக்ஷார்ச்சனை

7-4-90 அன்று சென்னை வில்லி வாக்கத்தில் இந்திரா சேஷாத்திரி அவர்கள் இல்லத்தில் அனேக பண்டி தர்கள் முன்னிலையில் திருவேங்கட முடையான் மஹாலக்ஷ்மி லக்ஷார் சனை வெகு விமரிசையாய் நடந்தது. பல ஊர்களில் இருந்து பண்டிதர்கள் வந்திருந்தார்கள். பல பண்டிதர் களின் உபன்யாஸத்துடன் லக்ஷார் சனை இனிது முடிந்தது.

—தகவல் ;- ராகவன் - திருப்பதி



Edited and Published on behalf of the T. T. Devasthanams by K. Subba Rao, M.A. and Printed at T. T. D. Press by M. Vijayakumar Reddy Manager, T. T. D. Press, Tirupati-517501.

